மகாத்மா காந்தி
புகழ் பாடும் புதிய
கொலம்பியா
...ரிகார்டு...

K.B. சுந்தராம்பாள்

உத்தமராம் காந்தியை
இயற்றியவர்: நாமக்கல் கவிஞர்...

அடிமையெனும்...
இயற்றியவர்: ராய. சொ...

GE. 6520



சரஸ்வதி ஸ்டோர்ஸ் மதராஸ்-2




மலர் 8
இதழ் 1

ஆகஸ்ட் 1

சர்வதாரி ஆடி 17


| | | |
|---|---|---|
| என்ன செய்தி? | ... | ... 7 |
| நிகழ்ச்சிச் சித்திரம் | சாஸ்திரி | ... 8 |
| கடல் பொங்கியது! கரை புரண்டது! | ... | ... 10 |
| உபயகுசலோபரி | ... | ... 15 |
| பசுந்தமிழ்ச் சோலை | கவிமணி | ... 16 |
| மடை காவல் | வி. எஸ். சுப்பையா | ... 18 |
| கண்டாள் கனையாழி! | டி. கே. சி. | ... 28 |
| காலக்ஷேபம் | ... | ... 30 |
| அலை ஓசை | கல்கி | ... 31 |
| ஜவாஹர் விஜயம் | ... | ... 41 |
| ஏ. எஸ். ஐயங்கார் | ... | ... 45 |
| பி. எஸ். ஜி. தர்மங்கள் | ரா. கி. | ... 49 |
| பெண் பிடித்தது ... | எஸ். வி. எஸ். | ... 52 |
| இப்படியும் ஒரு உலகம்! | "ஆசி" | ... 55 |
| ஆகாச வெடி | ... | ... 57 |
| வட்ட மேஜை | ... | ... 58 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.

## பூனா விவாகம்



கிருஷ்ணா — மீனு

மணக்கால் அன்னதானமய்யர் பௌத்திரன் சிரஞ்சீவி பாலகிருஷ்ணனுக்கும், ஸ்ரீ L. A. கிருஷ்ணசாமி அய்யர் D. F C. M. A. அவர்கள் புதல்வி சௌபாக்கியவதி மீனுக்கும் சென்ற ஜூலை மாதம் 8-ந் தேதி பூனாவில் திருமணம் விமரிசையாக நடைபெற்றது. தம்பதிகள் ஏராளமான வாழ்த்துச் செய்திகளும், பரிசுகளும் கிடைக்கப்பெற்றனர்.




மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 1

# என்ன செய்தி?

## கவலை தீர்ந்தது

ஜூலை மாதம் இருபத்தெட்டாம் தேதி என்ன நேருமோ என்று எல்லோரும் கவலைப் பட்டுக் கொண்டிருந்தனர். அன்று சென்னை சர்க்கார் பஸ் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்வதென்று தீர்மானித்திருந்ததே கவலைக்குக் காரணமாகும். பஸ்கள் போய்க் கொண்டிருக்கும் போதே ஜனங்கள் குறிப்பிட்ட இடத்துக்குக் குறிப்பிட்ட நேரத்தில் செல்ல முடியாதிருக்கும்போது, பஸ்களும் அடியோடு நின்று விட்டால் என்ன செய்வது? தவிர, வேலை நிறுத்தம் ஆரம்பமாகி விட்டால் பிறகு அது எத்தனை வாரங்கள் அல்லது மாதங்கள் நீடிக்குமோ? ஆம், சென்ற ஒரு வருஷத்துக்குள்ளாக எத்தனை வேலை நிறுத்தங்கள் மாதக் கணக்கில் நீடித்துத் தொழிலாளர்களுக்கும் ஜனங்களுக்கும் சர்க்காருக்கும் கஷ்டத்தையும் கலக்கத்தையும் உண்டு பண்ணின? வேலை நிறுத்தம் ஆரம்பமாகு முன் சமரசம் ஏற்படுவதும் அபூர்வமாகியது. பல தடவைகளிலும் தொழிலாளர்கள் தங்களுடைய பலத்தைப் பரிசோதித்துப் பார்த்தார்கள். சர்க்காரும் தங்களுடைய உறுதியைக் காட்டினார்கள். இறுதியில் கிடைத்த பலன் என்ன? தொழிலாளர்களுக்குக் கஷ்டமும் சர்க்காருக்குக் கவலையும் பொது ஜனங்களுக்கு அவஸ்தையும்தான்.

ஆனால் சர்க்கார் பஸ் தொழிலாளர்களும் அவ்வாறு எல்லை கடந்து போய் விடாமல் தங்களுக்கும் ஜனங்களுக்கும் கஷ்டம் ஏற்படாது தவிர்த்ததற்காக அவர்களைப் பாராட்டுகிறோம். ஒன்று கூட விடாமல் தங்களுடைய நிபந்தனைகளை அப்படியே நிறைவேற்றினாலன்றி வேலை நிறுத்த நோட்டீஸை வாபஸ் செய்து கொள்ள மாட்டோம் என்று பஸ் தொழிலாளர்கள் சவால் விடுக்கவில்லை. அதிகச் செலவு என்ற காரணத்தைக் காட்டி சர்க்காரும் தொழிலாளர்களின் கோரிக்கைகளுக்குக் கண்டிப்பாக இணங்க முடியாதென்று கூறவில்லை. இரு சாராரும் பரஸ்பரம் உள்ள கஷ்டங்களை உணர்ந்து விட்டுக்கொடுத்ததால் சமரசம் ஏற்படுவது சாத்தியமாயிற்று. தொழிலாளர்களும் வேலை நிறுத்த அறிக்கையை வாபஸ் செய்தனர். ஜனங்களின் கவலையும் தீர்ந்தது.

## ஆனந்தம் அடைவார்கள்

கண்களுக்கும் காதுகளுக்கும் நல் விருந்து கிடைக்கலாம் என்ற எண்ணத்துடனேயே ஜனங்கள் சினிமாவுக்குச் செல்கின்றனர். அவர்களுடைய எண்ணம் சிற்சில சமயங்களில் நிறைவேறுகிறது. சில சமயங்களில் நிறைவேறாமலும் போகிறது. அதில் மற்றொரு தொல்லை என்னவெனில் நல் விருந்து கிடைத்தாலும் அதை அனுபவிக்க முடியாமல் 'புஸ்' என்று புகைமண்டலம் கிளம்பிக் கண்களை மறைக்கிறது, மூச்சுத் திணறும்படி செய்கிறது. அத்தகைய வேதனையிலிருந்து ஜனங்களைக் காப்பாற்றுவதற்காக பம்பாய் மாகாண சர்க்கார் சென்ற வாரம் ஒரு சட்டம் பிறப்பித்திருக்கிறார்கள்.

சினிமா தியேட்டருக்குள் யாரும் பீடி, சிகரெட் முதலியன எதுவும் பிடிக்கக் கூடாது என்பதே அந்தச் சட்டமாகும். அவற்றிலிருந்து உண்டாகும் புகை மண்டலம் ஜனங்களின் கண்களை மறைப்பதுடன், அவர்களின் ஆரோக்கியத்தையும் சீர்குலைக்கிறது என்றே பம்பாய் சர்க்கார் அத்தகைய சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். மேற்படி சட்டமானது பம்பாயிலுள்ள பெரும்பான்மையான சினிமாப் பிரியர்களுக்கும் மிகுந்த சந்தோஷத்தைக் கொடுத்திருப்பதாக ஒரு பத்திரிகை கூறுகிறது. பம்பாயில் என்ன, மற்றெந்த மாகாணத்தில் அத்தகைய சட்டம் அமுலுக்கு வந்தாலும் அந்தந்த மாகாணத்திலுள்ள சினிமாப் பிரியர்களில் பெரும்பாலோர் ஆனந்தம் அடையத்தான் செய்வார்கள்.

# நிகழ்ச்சிச் சித்திரம்









சாஸ்திரி


"ஹைதராபாத் இந்திய யூனியனில் சேராவிட்டால் அதன் தனி வாழ்வு முடிந்து விடும்!...."
— ஜவாஹர்லால்ஜி!
மத்திய மாகாணம்
நைஜாம்
சென்னை


தினசரி வேலை.
நமது ரேடியோஸ்டேஷனிலிருந்து இன்று வெளியாக வேண்டிய பொய்களைத் தயாரித்து விட்டீர்களா?
குவாதே ஆஜம்


காஷ்மீர் கமிஷன், காஷ்மீர் உதவிக் கமிஷன், உதவிக் கமிஷனுக்கு உதவியளிக்கும் மற்றக் கமிஷன்களின் அங்கத்தினர் காஷ்மீரப் பிரச்னையை விழுந்து விழுந்து தேடி ஆராய்ந்து வருகிறார்கள்!
குட்டிக் கமிஷன்


தலைவர்
காஷ்மீர் கமிஷன்


"பெர்லினைக் கைவிடுவதில்லை என்று நாங்கள் உறுதி கொண்டிருக்கிறோம்."
— பெர்லினிலுள்ள அமெரிக்கத் தளபதி
ருஷ்யா
பெர்லின்

# கடல் பொங்கியது! கரை புரண்டது!

இதிகாச புராணங்களிலும் உலக மகா இலக்கியங்களிலும் முப்பத்திரண்டு இலட்சணங்கள் பொருந்திய இலட்சிய புருஷர்களைப் பற்றிச் சொல்லப்படுகிறது. அத்தகையவர்களைக் கதாநாயகர்களாக வைத்துக்கொண்டு இதிகாச இலக்கியங்கள் புனையப்படுகின்றன. அப்படிப்பட்டவர்களுடைய வீர பௌருஷ சாகசச் செயல்களைப் பற்றியே உலக சரித்திரமும் அதிகமாகக் கூறுகின்றது. அந்த இலட்சிய புருஷர்களால் அவர்கள் பிறந்த தேசங்களுக்குப் பெயரும் புகழும் மேன்மையும் மேட்டிமையும் ஏற்படுகின்றன.

பாக்கியம் செய்த தேசங்களிலே அத்தகைய முப்பத்திரண்டு இலட்சணங்களும் பொருந்திய இலட்சிய புருஷர் ஒருவர் பல நூற்றாண்டுகளுக்கு ஒருமுறை ஜனனம் ஆகிறார். அவருடைய முகத்தின் காந்தி மக்களை வசீகரம் செய்கிறது. அவருடைய உள்ளத்தின் ஒளி அவருடைய வாக்கிலே பிரகாசிக்கிறது. அவருடைய வீரமும் தீரமும் ஒழுக்கமும் நடத்தையும் சுயநலத் தியாகமும் பொதுநல சேவையும் மக்களின் இதய சிம்மாசனத்தில் அவரை ஏற்றி வைத்து ராஜாதி ராஜராகச் செய்கின்றன.

அப்பேர்ப்பட்ட இலட்சிய 'புருஷரைத் தரிசனம் செய்வதற்கு ஜனங்கள் ஓடோடியும் வருகிறார்கள். மணிக்கணக்கிலும் நாள் கணக்கிலும் அலுக்காமல் சலிக்காமல் அவருக்காகக் காத்திருக்கிறார்கள். அவருடைய திருமுகத்தை ஒரு கணம் பார்த்தவுடனே பரவசமடைந்து விடுகிறார்கள். அவருடைய குரலைக் கேட்டதும் மெய்ம்மறந்து புளகாங்கிதம் அடைகிறார்கள். அவரைப் பார்த்த கண்களும் அவருடைய வாய்மொழிகளைக் கேட்ட செவிகளும் பாக்கியம் செய்தவை என்று கருதுகிறார்கள்.

அத்தகைய இலட்சிய புருஷர்களிடம் அபூர்வமாக ஏதேனும் குற்றம் குறை இருந்தால் சாதாரணமாக அது மக்களின் கண்ணில் படுவதில்லை. அப்படித் தெரிந்த போதிலும் அந்தக் குற்றங்குறைகூட அவருடைய மேன்மைக்கு அறிகுறி என்று ஜனங்கள் சாதிப்பார்கள். அதற்காக வாதாடவும் போராடவும் சித்தமாயிருப்பார்கள். அந்த இலட்சிய புருஷரே "என்னிடம் இந்தக் குறை இருக்கிறது!" என்று எடுத்துச் சொன்னால்கூட, "அதெல்லாம் ஒன்றுமில்லை. அவருடைய மேன்மைக் குணத்தினால் அவ்விதம் சொல்லிக் கொள்கிறார்!" என்று ஜனங்கள் கூறுவார்கள். "மனிதர்களைத் தெய்வமாக்குவது பெரும் பிசகு; என்னைப் போற்றுகிறீர்கள், புகழுகிறீர்கள்!" என்று அவர் சொன்னால், "அடாடா! என்ன அடக்கம்! என்ன குணம்! தெய்வாம்சந்தான்!" என்று மேலும் போற்றி மகிழ்வார்கள்.

உலகத்து இலட்சிய மகா புருஷர்களின் வம்ச பரம்பரையில் உதித்தவர் நம்முடைய நாட்டில் நம்முடைய காலத்தில் ஒருவர் இருக்கிறார் என்பதும், அவர்தான் பண்டித ஜவாஹர்லால் நேரு என்பதும் சென்ற வாரத்தில் ஜவாஹர்லால்ஜி சென்னைக்கு விஜயம் செய்தபோது ஐயமற நிரூபணமாயின.

ஜனவரி 24உ பிற்பகல் 2-30க்கு ஜவாஹர்லால்ஜி மீனம்பாக்கம் விமான கூடத்தில் வந்து இறங்கினார். அவர் மவுண்ட்ரோடு வழியாக நகரசபை மண்டபத்துக்குத் திறந்த வண்டியில் செல்லுவார் என்று அறிவிக்கப்பட்டிருந்தது. சைதாப்பேட்டையிலிருந்து சென்ட்ரல் ஸ்டேஷன் வரையில் மக்கள் மத்தியானம் பன்னிரண்டு மணியிலிருந்து வந்து சாலையின் இருபுறமும் நிற்கத் தொடங்கினார்கள்.

முதலில் விசாலமாய் ஒற்றை வரிசையாக நின்றார்கள். அப்புறம் நெருங்கி நின்றார்கள். மனிதச் சுவரின் அகலம் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகமாகிக் கொண்டிருந்தது. புருஷர்களும் ஸ்திரீகளும் வயோதிகர்களும் பாலர்களும் சகல இனத்தாரும் பற்பல அந்தஸ்து படைத்தவர்களும் ஒன்றுகூடித் திரண்டு வந்து தோளோடு தோள் சேர்ந்து நின்றார்கள். விசாலமான மவுண்ட் ரோட்டின் மத்தியில் ஒரு கார் போவதற்கு மட்டுமே இடம் இருக்குமாறு



சில இடங்களில் அவ்வளவு ஜனக்கூட்டம் சேர்ந்து விட்டது. தேனாம்பேட்டையிலிருந்து சென்ட்ரல் ஸ்டேஷன் வரையில் நின்ற ஜனங்களின் எண்ணிக்கை லட்சக் கணக்கில் இருக்கும்.

திறந்த மோட்டார் வண்டியில் நின்றுகொண்டு மலர்ந்த முகத்தோடும் கூப்பிய கைகளோடும் இருபுறமும் அடிக்கடி திருப்பிப் பார்த்துக்கொண்டு சென்ற ஜவாஹர்லாலை ஜனங்கள் பார்த்தார்கள்; மகிழ்ந்தார்கள்; ஜெயகோஷம் செய்தார்கள். இளம் பிள்ளைகள் மெய்ம்மறந்து குதித்தார்கள்; கூச்சலிட்டார்கள்; கூத்தாடினார்கள்.

இத்துடன் ஜனங்களின் ஆர்வம் தீர்ந்து விட்டதா? இல்லவே இல்லை. மூன்று தினங்களும் ஜவாஹர்லால்ஜி எங்கெங்கே போனாலும் அங்கேயெல்லாம் ஜனங்கள் திரண்டு போய்க் காத்துக் கொண்டிருந்தார்கள். பார்க்காதவர்கள் ஆர்வத்துடன் ஓடி வந்து நின்றார்கள். பார்த்தவர்கள் மீண்டும் பார்க்கும் ஆசையோடு நின்றார்கள்.

நகரசபை மண்டபத்தைச் சுற்றி ஆயிரம் பதினாயிரம் ஜனங்கள் நெருங்கி நின்றார்கள். சட்ட சபை மண்டபத்துக்கு வெளியில் பல்லாயிரம் ஜனங்கள் ஆவலோடு காத்திருந்தார்கள். ஹிந்திப் பிரசார சபைக்கு உள்ளேயும் வெளியிலேயும் நாற்பதினாயிரம் ஜனங்கள் சேர்ந்திருந்தார்கள். கவர்ன்மெண்ட் மாளிகையின் வாசலில் மூன்று நாளும் இடைவிடாத ஜனக் கூட்டம். மஹிலா சமாஜ் வாசலில் பெருங் கூட்டம். விவேகானந்தா காலேஜுக்கு எதிரில் ஏராளமான கூட்டம். மியூஸியம் தியேட்டருக்கு அருகில் அமோகமான கூட்டம். கார்ப்பொரேஷன் ஸ்டேடியத்தின் கூட்டத்தைச் சொல்லி முடியாது.

சென்னை மக்கள் ஜவாஹர்லால்ஜியிடம் கொண்ட பிரேமையை உள்ளபடி தெரிந்து கொள்வதற்கு ஞாயிற்றுக் கிழமை மாலை கோட்டை மைதானத்தில் கூடியிருந்த மகத்தான கூட்டத்தைப் பார்த்திருக்க வேண்டும். சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து கவர்ன்மெண்ட் மாளிகை வரையில் கிழக்கே கடற்கரைச் சாலை வரையில் ஒரே ஜன சமுத்திரம்தான். சிலர் "ஐந்து லட்சம்" என்று மதிப்பிட்டார்கள். சிலர் "பத்து லட்சம்" என்று மதிப்பிட்டார்கள். இரண்டுக்கும் மத்தியில் "ஏழெட்டு லட்சம் ஜனங்கள் இருக்கலாம்" என்று பலர் கருதினார்கள்.



இத்தனை லட்சம் மக்களுடைய மனதிலும் வெகு காலமாகப் பொங்கிக் கொண்டிருந்த அன்பையும் ஆர்வத்தையும் யார்மேல் பொழிவது என்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தது போலும். கடைசியில் அதற்குத் தக்க பாத்திரம் வந்ததும் அவர்மீது பொழிந்தது போலும் காணப்பட்டது. பூரண சந்திரனைக் கண்ட சமுத்திரம் பொங்குவதுபோல் மூன்று நாட்களும் சென்னைமா நகரத்து மக்களின் இதயக் கடல் பொங்கியது; அன்பு வெள்ளம் கரை புரண்டு ஓடியது.

* * *

இவ்வளவு மக்களின் அன்புக்கும் ஆசைக்கும் சரியான பாத்திரம் தாம் என்பதை ஜவாஹர்லால்ஜியும் நன்கு நிரூபித்து விட்டார். மீனம்பாக்கம் விமான மைதானத்தில் 24ம. பிற்பகல் இறங்கியதிலிருந்து திரும்ப 27ம. காலை விமானம் ஏறும் வரையில் ஒரு நிமிஷமேனும் ஜவாஹர்லால்ஜிக்கு ஓய்ச்சல் ஒழிவென்பதே கிடையாது. தினம் பத்துப் பன்னிரண்டு நிகழ்ச்சிகளில் பிரசன்னமாகிக் கலந்து கொண்டார். குறிப்பிட்ட காலம் தவறாமல் அந்தந்த நிகழ்ச்சிக்குப் போய்ச் சேர்வதற்காக ஓடி ஓடிச் சென்றார். மோட்டாரிலும் சென்றார்; விமானத்திலும் சென்றார்; கால் நடையாகவும் சென்றார். மக்கள் கூட்டத்தின் மத்தியில் புகுந்து தமக்குத்தாமே வழி ஏற்படுத்திக் கொண்டு சென்றார். ஒளி படைத்த விசாலமான கண்களைச் சுழற்றிச் சுழற்றி அவர் மக்களின் முகங்களை உற்று உற்றுப் பார்த்தார்; மக்களும் ஆர்வம் ததும்பிய கண்களோடு அவரைக் கண் கொட்டாமல் பார்த்தனர். மக்களின் அன்பினால் அவர் பரவசமடைந்தார்; அவருடைய அன்பினால் மக்கள் பரவசமடைந்தனர். மக்களின் உள்ளமும் தலைவரின் உள்ளமும் நெகிழ்ந்து ஒன்று கலந்தன.

ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் ஜவாஹர்லால்ஜி பேசினார். அந்தந்த இடத்துக்கும் சந்தர்ப்பத்துக்கும் தகுந்தபடி பேசினார். ஆனால் அவர் பேசிய ஒவ்வொரு வார்த்தையும் சக்தி நிறைந்த வார்த்தையாயிருந்தது; பசுமரத்தாணிபோல் மக்கள் மனத்தில் பதிந்தது. அவர் இனிய வார்த்தைகளையும் பேசினார்; கடுமையான வார்த்தைகளையும் பேசினார். ஆனால் இனிய வார்த்தையானாலும் கடும் வார்த்தையானாலும்

அது உள்ளத்திலே யிருந்து உணர்ச்சியுடன் வெளிவந்த உண்மை வார்த்தையா யிருந்தது. ஆகையால் கேட்டவர்களின் மனத்தில் அவருடைய பேச்சு பக்தி சிரத்தையை உண்டாக்கியது.

* * *

காரைக்குடி வைபவத்தில் கூடியிருந்த திரளான மக்களிடையில் பண்டித ஜவாஹர்லால் நேரு, "இந்தியாவிலிருந்து தரித்திரத்தை ஒழித்துக் கட்டுவோம்; வறுமையைக் களைந்தெறியக் கங்கணம் பூணுவோம்!" என்று உறுதிமொழி புகன்றார். "இந்த அரிய திருப்பணிக்கு விஞ்ஞான ஆராய்ச்சியின் உதவியை நாடுவோம்!" என்றார்.

சென்னை நகர சபையின் உபசாரத்துக்குக் கூறிய பதிலில் "வகுப்புவாத பூதத்துக்கு இனி இந்தியாவில் இடமில்லை; மாறுவேடம் பூண்டு வந்தாலும் அதைத் தொலைத்து முழுக வேண்டும்; மாகாண வாதம் என்னும் பிசாசையும் அடித்து விரட்டத்தான் வேண்டும்" என்று எச்சரித்தார். சென்னை மாகாண வாசிகளின் மதிநுட்பத்தைப் பாராட்டினார். "அகில இந்திய நோக்கத்துடன் எந்தப் பிரச்னையையும் சிந்தியுங்கள்; சிந்தித்து வடக்கே குழப்பத்தில் ஆழ்ந்துள்ள எங்களுக்கு வழி காட்டுங்கள்!" என்று கேட்டுக்கொண்டார்.

சட்டசபை மண்டபத்தில் நமது அருமைத் தலைவர் ராஜாஜியைப் பற்றிய அற்புதமான உண்மையை வெளியிட்டார். "வாய்ப் பேச்சில் ஒரு மனிதர் வெளியிடும் கொள்கையும் திட்டமும் அவ்வளவு முக்கியமானவையல்ல; மனிதருடைய நேர்மையும் சீலமுந்தான் பரம முக்கியமானவை. நேர்மையிலும் சீலத்திலும் இணையற்றவர் ராஜாஜி. ஆகையினால் தான் இந்திய சுதந்திர ராஜ்யத்தில் முதன்மையான பதவிக்கு அவர் வந்திருக்கிறார்!" என்று கூறினார்.

நகர சபை ஸ்டேடியத்தில் தொழிலாளரின் மாபெரும் கூட்டத்தில் ஜவாஹர்லால்ஜி அருமையான பிரசங்கம் செய்தார். "ஏழைத் தொழிலாளிகளின் முன்னேற்றமே எங்களுடைய பிரதான இலட்சியம். வேறு எதற்காக இவ்வளவு பகீரதப் பிரயத்தனங்கள் செய்து சுதந்திரம் பெற்றோம்?" என்று கேட்டுவிட்டு, "இந்தச் சமயத்தில் நாட்டில் கலகத்தையும் குழப்பத்தையும் விளைவிக்க விரும்புகிறவர்கள் தான் தொழிலாளரின் முன்னேற்றத்துக்குப் பரம விரோதிகள்; அவர்களைச் சும்மா விட மாட்டோம்! அழித்துப் போடுவோம்!" என்று கர்ஜனை புரிந்தார்.

ஹிந்திப் பிரசார சபையின் புதிய கட்டடத்தைத் திறந்து வைத்துப் பேசுகையில் தமிழ் மொழியின் தொன்மையையும் தமிழ் இலக்கியங்களின் மேன்மையையும் குறிப்பிட்டார். "ஹிந்தி பாஷையில் அப்படிப்பட்ட இலக்கியம் ஒன்றுமில்லை. மாகாணத்துக்கு மாகாணம் சம்பந்தம் வைத்துக் கொள்வதற்கே ஹிந்தி மொழியைப் பரப்ப வேண்டும் என்கிறோம். அந்தந்த மாகாணத்தின் தாய் பாஷைக்கு ஹிந்தி இளைய சகோதரியாயிருக்கும்" என்று விளக்கிக் கூறினார்.

கோட்டை மைதானத்தில் கூடியிருந்த மாபெருங் கூட்டத்தில் பிரதம மந்திரி ஜவாஹர்லால் ஒரு மகத்தான பிரசங்கம் செய்தார். சென்னை மக்களைச் சில காலமாகப் பெரிதும் கலக்கிக் கொண்டிருக்கும் விஷயத்தைப் பற்றிப் பேசினார். "நைஜாம் இந்திய யூனியனில் சேர்ந்தேயாக வேண்டும்; சேராவிட்டால் நைஜாம் என்ற தனி ராஜ்யமே இராது' அதைப்பற்றிச் சந்தேகமே வேண்டியதில்லை!" என்று சபதம் கூறினார்.

நம்மவர்களில் சில புத்திசாலிகள் பண்டித நேருவையும் சர்தார் படேலையும் விடத் தாங்கள் கெட்டிக்காரர்கள் என்றும் தேச பக்தி ததும்பப் பெற்றவர்கள் என்றும் நினைத்துக் கொண்டு விடுகிறார்கள். நினைத்துக் கொண்டு, "நைஜாம் விஷயத்தில் இந்திய சர்க்கார் சும்மா பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்! உடனே நைஜாம் மீது போர் தொடங்க வேண்டாமா? அதை விட்டு வெறும் பேச்சில் காலங் கழிக்கிறார்களே! சுத்த மோசம்!" என்று உளறிக் கொட்டுகிறார்கள். இத்தகையவர்களுக்கு ஜவாஹர்லால் நேருவின் பேச்சு தக்க பதிலாக வாய்த்தது. "நைஜாம் மீது யுத்தம் தொடங்குவது என்ன? சுதந்திர ராஜ்யமாயிருந்தால் அல்லவா அதன் பேரில் யுத்தம் தொடங்கலாம்? நைஜாம் இந்தியாவுக்குட்பட்டது; ஆகையால் அவசியமானால் எந்தச் சமயத்திலும் இராணுவ நடவடிக்கை எடுப்போம். எப்போது எந்தவிதமாக என்பதை எங்களுக்கு விட்டுவிடுங்கள்!" என்றார்.

நைஜாமில் நடக்கும் அக்கிரமங்களைக் கேட்க எல்லாருக்கும் இரத்தம் கொதிக்கத்தான் கொதிக்கிறது. ஆனால் ஜவாஹர்லாலுக்கும் படேலுக்கும்

அப்படிக் கொதிக்காமலிருக்குமா? கட்டாயம் கொதிக்கத்தான் செய்யும். எவ்வளவுதான் இரத்தம் கொதித்தாலும் ஒரு அரசாங்கம் நடவடிக்கை எடுக்கும்போது எல்லாவித பலாபலன்களையும் யோசித்துச் செய்தல் அவசியம். முக்கியமாக, நைஜாமின் வசிக்குள் ஒரு கோடிக்கு மேற்பட்ட ஜனங்களுக்கு இப்போதைக் காட்டிலும் அதிகக் கஷ்டம் சர்க்கார் நடவடிக்கையால் உண்டாகக் கூடாதல்லவா? இதையும் ஜவாஹர்லால்ஜி குறிப்பிட்டார். நைஜாம் விஷயத்தில் ஜவாஹரின் சர்க்கார் கட்டாயம் சரியான நடவடிக்கை எடுப்பார்கள் என்பது நிச்சயம். அந்தச் சமயம் வரும்போது நம்முடைய கடமையைச் செய்ய நாம் தயாராயிருக்க வேண்டும்.

"உங்களுடைய பிரதிநிதிகள் நாங்கள். உங்களுடைய சார்பாகவே ராஜ்யம் நடத்துகிறோம். எங்களுடைய காரியங்களில் குறைகள் இருந்தால் எடுத்துக் காட்டுங்கள். ஆனால் குறை கூறுவதுடன் நின்று விடாதீர்கள். இந்தியாவின் முன்னேற்றத்துக்காக உங்களில் ஒவ்வொருவரும் ஏதேனும் ஒரு தொண்டு செய்யுங்கள்!" என்று கேட்டுக் கொண்டார். அவருடைய வேண்டுகோளை நிறைவேற்றுவது நமது தலைசிறந்த கடமையாகும்.

பண்டித ஜவாஹர்லால்ஜி இந்திய சுதந்திரப் போரில் ஈடுபட்ட நாளிலிருந்து பொது மக்களின் உள்ளத்தைக் கவர்ந்தவர். இந்தியாவின் எந்த மூலைக்கு அவர் எப்போது சென்றாலும் மக்கள் குதூகலமாக வரவேற்கவே செய்வார்கள். இதற்கு முன்னால் தமிழ் நாட்டுக்கு ஜவாஹர் விஜயம் செய்த போதும் அளவில்லா உற்சாகத்துடன் தமிழ் மக்கள் அவரை வரவேற்றார்கள்; அன்பைச் சொரிந்தார்கள்.

எனினும் இந்த முறை சென்னைக்கு அவர் விஜயம் செய்ததில் முன்னைப் போதுமில்லாத ஒரு விசேஷம் உண்டு. மக்களின் மனதைக் கவர்ந்த தேசபக்த திலகமாக மட்டும் அவர் இம்முறை வரவில்லை. இந்திய சுதந்திர சர்க்காரின் பிரதம மந்திரியாய், முப்பத்தைந்து கோடி மக்களின் அதிகாரம் பெற்ற பிரதிநிதியாய் இம் முறை நேருஜி விஜயம் செய்தார். எனவே அவருக்குத் தனிப்பட அளிக்கவேண்டிய மரியாதையோடு அவர் வகிக்கும் உயர்ந்த ஸ்தானத்துக்கு உரிய மரியாதையையும் சேர்த்து அளிப்பது முறையாகும். அந்தக் கடமையைப் பரிபூரணமாக நிறைவேற்றியது பற்றிச் சென்னை மக்களுக்கு நமது பாராட்டுதலைச் சமர்ப்பிக்கிறோம்.

# உபயகுசலோபரி



அனுமாருக்கு நமஸ்காரம். சீதா தேவிக்கு வணக்கம். இராமபிரானுக்குப் பக்தியுடன் நமது அஞ்சலி. அனுமாரும் சீதா தேவியும் இராம பிரானுமாகத் தீர்க்கமாக ஆலோசித்துச் சரியான சமயத்தில் சீதாதேவியின் கையில் கணையாழி கிடைக்கும்படி செய்து அருளினார்கள். அவர்களுடைய நோக்கத்தை அறிந்து வால்மீகியும் கம்பரும் பொருத்தமான இடத்தில் கணையாழிப் படலத்தைப் பாடினார்கள். இந்தச் சுப சம்பவம் உங்கள் 'கல்கி'ப் பத்திரிகைக்கு ஏழாம் பிராயம் பூர்த்தியாகி எட்டாவது வயது பிறக்கும் சுப தினத்தில் கொண்டாடுவதற்கென்றே அந்தக் காலத்தில் நடந்திருக்கிறது! இவ்வளவு தீர்க்க திருஷ்டியுடன் நடத்தப்பட்ட அருமையான காரியத்தை நாம் பாராட்ட வேண்டியது தானே? கணையாழிப் படலக் காட்சியை இந்த இதழ் அட்டைச் சித்திரமாக வெளியிட்டுப் பாராட்டியிருக்கிறோம். மேற்படி சம்பவத்தைப் பற்றிய 'கபர் தரும் காட்சி'யை ரஸிகமணி அவர்கள் திருப்ப விளக்கமாகப் படப் பிடித்துத் தந்திருப்பதை இந்த இதழின் உட் பக்கங்களில் காணலாம்.

அனுமாருடைய கையிலிருந்து ஒளி வீசிய இராமனுடைய கணையாழியைப் பார்த்த கணத்திலிருந்து 'சிறையிருந்த செல்வி'யின் துயரங்கள் எல்லாம் பறந்தோடிவிட்டன. பத்து மாதமாகப் பட்ட கஷ்டங்களை எல்லாம் சீதா தேவி மறந்து ஆனந்தசாகரத்தில் அமிழ்ந்தாள். இன்று முதற்கொண்டு "கல்கி" நேயர்கள் அனைவரும் அத்தகைய ஆனந்தத்தை அடைய வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம். அரிசி ரேஷனால் படும் கஷ்டம், அரிசி ரேஷன் இல்லாததால் படும் கஷ்டம், ஜவுளிக் கண்ட்ரோலினால் படும் கஷ்டம், ஜவுளிக் கண்ட்ரோல் இல்லாததால் படும் கஷ்டம் முதலிய சகல விதமான கஷ்டங்களும் நம் நேயர்களை விட்டு நீங்கட்டும்; காலமழை பொழியட்டும்; காஷ்மீர் கமிஷன் தொலையட்டும்; நாடு செழிக்கட்டும்; நாட்டின் சுதந்திரம் வளரட்டும்; நைஜாம் தொல்லை ஒழியட்டும்; நானிலமெல்லாம் மகிழட்டும்!

மனிதர்களுடைய காலக் கணக்கில் பத்து வருஷம் பத்திரிகைகளுக்கு ஒரு வருஷம் என்று சொல்ல வேண்டும். ஒரு மனிதருக்கு எழுபது வயதானால் எப்படி அந்த அபூர்வ நிகழ்ச்சியைக் கொண்டாடுகிறோமோ, அதுபோல ஒரு பத்திரிகைக்கு ஏழு வயதானால் கொண்டாடுவது பொருத்தமாயிருக்கும். ஒரு மனிதர் எழுபது வருஷத்தில் அனுபவிக்கக்கூடிய இன்னல்களையும் இடையூறுகளையும் ஒரு பத்திரிகை ஏழு வருஷத்தில் அனுபவித்துக் கரையேற வேண்டியதாகிறது.

யுத்த காலத்திலே குழப்பம் நிறைந்த சமயத்திலே பிறந்த உங்கள் "கல்கி" எவ்வளவோ இன்னல்களையும் இடையூறுகளையும் தாண்டி இன்று எட்டாவது பிராயத்தை இனிது அடைந்திருக்கிறது. தமிழ் மக்களின் எல்லையற்ற அன்பினாலும் அபிமானத்தினாலுந்தான் இது சாத்தியமாயிற்று. 1941 ஆகஸ்டு 1உ யில் வெளியான "கல்கி"யின் முதல் இதழிலிருந்து இன்று வரை இடைவிடாது ஆதரித்து வந்திருக்கும் எண்ணற்ற நேயர்களுக்கு நமது மனமார்ந்த நன்றியைச் சமர்ப்பிக்கிறோம்.

தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் தமிழ் மக்களுக்கும் எல்லாத் துறைகளிலும் தொண்டு செய்வதொன்றே "கல்கி"யின் முதல் இதழில் வெளியிட்டிருந்த நம்முடைய இலட்சியமாகும். அந்த இலட்சியத்தையே இனியும் எள்ளளவும் பிறழாமல் கடைப்பிடித்து வருவோம் என்று உறுதி கூறுகிறோம்.

கவிமணி ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள், — தமது பெயரிலேயே 'கவி நாயகர்' என்று இயல்பாக வாய்க்கப் பெற்ற பெரியார், — "கல்கி" தொடங்கியபோது ஆசி கூறி அனுப்பிய அருமைப் பாடலை 1941 ஆகஸ்டு 1உ வெளியான முதல் இதழில் வெளியிட்டிருந்தோம். அதே பாடலை இந்த எட்டாம் ஆண்டு ஆரம்ப இதழில் மீண்டும் மகிழ்ச்சியுடன் வெளியிட்டிருக்கிறோம். "பல்கி வளரும் பசுந் தமிழ்ச் சோலையாம் கல்கி" என்னும் கவிமணியின் திருவாக்கு இது வரைக்கும் அற்புதமாய் நிறைவேறி வந்திருப்பது போலவே இனியும் நிறைவேறும் என்பதில் ஐயம் என்ன?

• • •

ஆகஸ்டு 15உ "கல்கி" இதழ் இந்திய சுதந்திர மலராக வெளியாகிறது. அதைப் பற்றிய விவரங்களை அடுத்த இதழுக்கு வைத்துக் கொள்ளலாம்.

## பசுந் தமிழ்ச் சோலை

புத்தம் புதுமலர்கள் பூக்குமே வண்டினங்கள்
சித்தம் மகிழ்ந்துண்ணச் சேருமே—நித்தமும்
பல்கி வளரும் பசுந்தமிழ்ச் சோலையாம்
'கல்கி' படர்ந்து வருங்கால்!

[ நாஞ்சில் நாட்டுக் கவிமணி ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் 1—8—41-ல் வெளியான "கல்கி"யின் முதல் இதழுக்கு மேற்படி வாழ்த்துப் பாடலை மனமுவந்து அளித்தார்கள். கவிமணி தம் அருமை மனைவியாருக்குக் "கல்கி"ப் பத்திரிகையைப் படித்துக் காட்டும் காட்சியை மேலேயுள்ள படத்தில் காணலாம்.]



சுலபமாக எழுதுங்கள்



எவ்விதமாக எழுதினாலும் சுலபமாக எழுதுவது என்பது சேர்ந்து வாய்ந்த மெண்ட்மோர் ஆட்டோ-ப்ளோ பேனாவின் முக்கிய அம்சங்களில் ஒன்று. இந்திய சீதோஷ்ண நிலைக்காகவே செய்யப்பட்ட அதன் பாகங்கள் இதை நன்கு நிரூபிக்கின்றன. இத்துடன் டாப் பில்லிங், லீவர் பில்லிங், ஸ்டட் பில்லிங் ஆகிய மாடல்களில் ஆஸ்மி இரிடியம் தேர்ந்தெடுக்கப்பட்ட முனைகளுடன் கூடிய 14 காரட் தங்க நிப்புடன் கூடியது. 'பெருமைபடக் கூடிய பேனாவிது இதைவிட வேறு என்ன வேண்டும்?

விலை ரூ. 15/-

**MENTMORE**
*Auto-Flow*
MADE IN ENGLAND

மெண்ட்மோர்
ஆட்டோ - ப்ளோ
இங்கிலாந்தில் செய்யப்பட்டது

மொத்த வியாபாரிகளுக்கு உரிமை பெற்ற முழு வினியோகஸ்தர்கள் :
முல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட், 15, கச்சூராம செட்டித் தெரு, மதராஸ்

**விற்பனைக்குப் பிறகும் எங்கள் சேவை!**

உங்கள் மெண்ட்மோர் 'ஆட்டோ-ப்ளோ' பேனாவில் எந்தக் கோளாறு ஏற்பட்டாலும் உங்களுக்கு அருகிலுள்ள சர்வீஸ் டிப்போவில் ரிப்பேர் செய்து கொள்ளலாம். எங்கள் டிப்போக்களிலும், ரிப்பேர் சாமான்கள் போதிய ஸ்டாக் உள்ளன. உங்களுக்கு அருகாமையிலுள்ள ஏஜண்டு: C. வெங்கட்ராமது செட்டி & சன்ஸ், 57-பந்தர் தெரு, மதராஸ்

---

**பருத்தி நூல்களுக்குப் பிரதான ஸ்தாபனம்**

# மதுரை மில்ஸ் கம்பெனி லிட்.

**மதுரை - தூத்துக்குடி - அம்பாசமுத்திரம்**

**5,00,000 நூற்கும் கதிர்கள் நம்பர் 80 வரை நூல்கள்**

**எங்களுடைய விசேஷமான நூல்கள்:** ஒத்தை நூல், இரட்டை நூல், பனியன் நெசவுக்கேற்ற கோன் நூல், மில் நெசவுக்கேற்ற சீஸ் நூல், முறுக்கேற்றிய நூல்.

**நாங்கள் சப்ளை செய்வது:** கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கு வேண்டிய காரிக்கன் நூல்கள், இயந்திர நெசவுக்கேற்ற வார்ப்பு நூல்கள் கனத்த வெப்பிங், கான்வாஸ் முதலியவைகளுக்கேற்ற மடக்கு இரட்டை நூல்கள், மற்றும் பின்னல் இயந்திர நெசவுக்கேற்ற மிருதுவான சன்ன நூல்கள். எங்கள் எகிப்திய பருத்தி நூல்கள் இறக்குமதியாகும் நூல்களைப்போல் எல்லா வகையிலும் சீர்த்தி பெற்றவை. நாங்கள் நூற்பதைத் தவிர நெய்வதில்லை.

மானேஜர்கள்: ஏ. & எப். ஹார்வி லிமிடெட்



# மடை காவல்

சின்னடியன் கால்வாயில் மடை காவல் கூட்டம் மேலே முன்னேறி 'விறு விறு' என்று போய்க் கொண்டிருந்தது. அரை பர்லாங், ஒரு பர்லாங் தூரத்தில் மடைகள். அவைகளி லெல்லாம் மள மளவென்று ஆட்களைக் காவல் வைத்து விட்டு முன்னேறினார்கள். எப்போதும் இருகரையும் நிறைந்து போகும் கால்வாய் இப்போது கண்டிப்போய்க் கிடந்தது. மறு பக்கம் பார்த்தால் பச்சை பச்சல என்று கிடக்கும் பயிர்களெல்லாம் நீல கருகிப்போய்க் கிடந்தன.

கடைசியாகக் குறிச்சியூர் தென்பட்டது. கால்வாயின் கரை மேலேயே இருந்தது அந்தச் சின்ன கிராமம். கிராமத்துக்குக் கிழ்ப் பக்கம் சுமார் அரை பர்லாங் தூரத்திலுள்ள மடைக்கு யார் காவலாக இருப்பது என்பதில் கொஞ்சம் சலசலப்பு ஏற்பட்டது. மற்றவர்கள் அந்த மடைக்குக் காவல் இருக்க அவ்வளவு தயாராயில்லை என்று தெரிந்ததும் கந்தசாமி முன்னுக்கு வந்து, "என்ன, எல்லாரும் இப்படிப் பதுங்குகிறீர்களே! குறிச்சியூர்க்காரர்கள் என்ன அப்படிக் கொம்பு முளைச்சவங்களா? நான் இருக்கேன் இங்கே!" என்றான்.

"கூட யாராவது ஒருவர் இருந்தால் நல்லது" என்றார்கள் சிலர்.

"என்னத்துக்கு? வேண்டவே வேண்டாம். நான் தனியாக இருக்கேன்" என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டான் கந்தசாமி.

அவர்களும் அவனுடைய துணிச்சலை வெகுவாகப் பாராட்டி விட்டு மேலே கடந்தார்கள்.

மடையை அடுத்துக் கால்வாய் ஓரமாக நிற்கும் வில்வமரத்து நிழலில் ஜமக்காளம், தடிக்கம்பு, அன்றைய ராத்திரிக்குத் தயார் செய்த புளியஞ்சாதம், செம்பு முதலியவைகளை வைத்தான் கந்தசாமி. பின்பு மடைப் பலகையை இறுக்கி நன்றாகக் கொண்டியைப் போட்டான்.

நண்பர்களிடம் தைரியமாகப் பேசிவிட்டாலும் கந்தசாமிக்கு உள்ளுக்குள் கொஞ்சம் உளைச்சல்தான். ஏனென்றால் குறிச்சியூர் கிராமம் இதோ கரைமேலே கூப்பிடும் தொலைவில் இருக்கிறது. தண்ணீர் மேலேயிருந்து வந்ததும் அந்த ஊர்க்காரர்கள் வந்து, "பயிரெல்லாம் ரொம்பவும் வாடிப்போச்சு; கொஞ்சமாவது தண்ணீர் விடத்தான் வேண்டும்" என்று வாதாடினால் என்ன செய்வது என்று சிந்தித்தான். பின்பு வந்தது வரட்டும் என்று தன்னைத் தைரியப்படுத்திக் கொண்டு கையில் கட்டியிருந்த கடிகாரத்தைப் பார்த்தான்: மணி காலரை.

கந்தசாமி எதிர்பார்த்தபடி ஒரு ஈ, காக்கைகூட அந்த ஊரிலிருந்து மடையண்டை வரவில்லை. ஜனங்கள் வயல் காட்டில் அங்கங்கே கூட்டம் கூட்டமாக நின்று ஓடைகளில் தேங்கிக் கிடந்த தண்ணீரை வயல்களுக்கு இறைத்துக் கொண்டிருந்தார்கள். இந்தமாதிரி கால்வாய் நீளம் பூராவும் தண்ணீர் தட்டுப்பாடு ஏற்பட்டிருக்கிற காலத்தில் மேலிருந்து மடை காவல் பண்ணி, சண்டை சச்சரவு இல்லாமல் தண்ணீர் கீழே கொண்டு போவதானால் அது கெட்டிக்காரத்தனமான காரியந்தான். ஆனால் ஜில்லா கலெக்டர் ஆறு போலீஸ்காரர்களைத் துப்பாக்கி சகிதம் மடை காவல்காரர்களுக்குத் துணையாக அனுப்பியிருக்கிறார் அல்லவா? அவர்கள் ரோந்து




## முதற் பரிசுக் கதை 1.

வி. எஸ். சுப்பையா.

வருவார்கள்; பார்த்துக் கொள்ளலாம் என்ற தைரியத்தோடு இருந்தான்.

மாலை ஐந்தரை மணிக்கு மேல்தான் கரைமீது ஆள் நடமாட்டம் ஏற்பட்டது. மடை காவலைக் கண்டு அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். ஒரிருவர், "ஐயாவுக்கு எந்த ஊரு?......ஊம்...தண்ணி எங்கே கிழே போய்ச் சேரப்போவுது! மலையில்தான் மஞ்சு கொஞ்சங்கூடக் கவியல்லையே!" என்று தங்கள் அபிப்பிராயத்தை வெளியிட்டார்கள். கந்தசாமி அதிகம் பேசவில்லை. கூடியமட்டும் குறிச்சியூர்க்காரர்களிடம் அதிகமாகப் பேச்சு வைத்துக் கொள்ளக் கூடாதென்பது அவன் எண்ணம்.

பொழுது மலைவாயில் புகுந்துவிட்டது. அந்தச் சமயத்தில் கரையின் கிழக்கேயிருந்து ஒரு பெண்—சுமார் பதினெட்டு வயசு இருக்கலாம் — தலையில் புல்லுக் கட்டோடு வந்து கொண்டிருந்தாள். நிறம் கறுப்பானாலும் பளபளப்பான மேனி. மத்தியான வெய்யிலில் மீன் துள்ளிப் பாய்கிறதைப்போலக் கண்கள் அங்கும் இங்கும் பாய்ந்தன. நாட்டு வழக்கப்படி காதை வடித்துப் 'பாம்படம்' என்ற நகையைப் போட்டுக் கொள்ளாமல், காதைக் குத்தி அழகாக வெள்ளைக் கம்மல் போட்டுக் கொண்டிருந்தாள். அதற்கு ஏற்றமாதிரி வலது பக்கத்து மூக்கில் வெள்ளைக் கல் அலுக்கு மூக்குத்தியும் போட்டிருந்தாள். கழுத்தில் ஓர் அட்டிகையைத் தவிர வேறு ஆபரணம் எதுவும் இல்லை. கட்டியிருந்த கத்தரிப் பூச் சேலையும், தாழம்பூ நிற



ஜாக்கெட்டும் அவளை நன்றாக எடுத்துக் காட்டின.

இவ்வளவையும் அவள் தன்னைத் தாண்டிச் செல்வதற்குள் அவன் கண்காணித்து விட்டான். அவள் போய்க் கரை ஓரத்திலுள்ள ஒரு வீட்டினுள் நுழைவதையும் கண்டான். கொஞ்ச நேரத்துக்குள் ஒரு செப்புக் குடத்தோடு திரும்பவும் கிழக்கு நோக்கி வந்தாள் அவள். வந்தவள் மற்றவர்களைப்போலவே, "ஓஹோ! மடை காவலோ! சரிதான்; எந்த ஊரு உங்களுக்கு?" என்று கேட்டாள், அவன் முற்றிலும் எதிர்பாராத வகையில்.

குறிச்சியூர் பெண்பிள்ளைகள் பொல்லாதவர்கள் என்றும் படுதுணிச்சல் உள்ளவர்கள் என்றும் எதற்கும் அஞ்ச மாட்டார்கள் என்றும் அவன் கேள்விப்பட்டதெல்லாம் அதற்குள் மறந்து போச்சா, என்ன? ஆகவே அவன் ஒன்றும் அவளிடம் பேசவில்லை.

அவன் வாய் திறக்காததைக் கண்டு அவளுக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது. ஒரு நினுசான பார்வையைச் சுழற்றி எறிந்து விட்டு அவள் குடத்தோடு ஓர் ஒய்யார நடை நடந்து போனாள். சற்று நேரத்துக்குள் கிணற்றிலிருந்து குடமும் தண்ணீருமாய் மேற்கே நோக்கி வந்து கொண்டிருந்தாள்.

வந்தவள் அப்படியே பேசாமல் போவாள் என்றல்லவா அவன் எதிர்பார்த்தான்? அதுதான் இல்லை. திரும்பவும் அதே இடத்தில் நின்று கொண்டு, "இப்போ மணி என்ன ஆச்சுன்னு கொஞ்சம் சொல்ல மாட்டிங்களா?" என்று கொஞ்சும் குரலில் கேட்டாள், இடுப்பில் குடமும் ஒரு பக்கம் சாய்ந்த தலையுமாக!

கந்தசாமி மிரண்டு போனான். இருந்தாலும் விருப்பு வெறுப்பு இல்லாதவன் போல், "ஆறரை மணி ஆவுது" என்று பதிலிறுத்தான்.

"அது சரி! அதென்ன, நான் அப்போ கேட்டதுக்குப் பேசாமலே இருந்திங்க?" என்று இன்னொரு கேள்வியைப் போட்டாள். அவன் பிடி தளர்ந்து விட்டது! "ஓ, அதுவா! மேலே மடைகாவலுக்கும் அணைக்கட்டுக்கும் போனவங்க இன்னும் தண்ணீரைக் கீழே திருப்பல்லியே என்கிறதைப் பத்தி யோசனை பண்ணிக்கிட்டு இருந்துட்டேன்!" என்றான் கொஞ்சம் தாழ்ந்த குரலில்.

"சரிதான், நான் என்னமோ நினைச்சுட்டேன்! ஆளைப் பார்த்தால் நல்லா இருக்கிறாரே, ஒரு வேளை காது கேது மந்தமோன்னு நினைச்சுட்டேன்!" என்று சொல்லிவிட்டு, வீட்டைப்பார்த்துக் குடம்

கீர் தளும்ப வேகமாய் நடந்து போனான். கந்தசாமியோ ஊர் பேர் தெரியாத தன்னிடம் அந்தப் பெண் பேசுகிறதைப் பார்த்தால் அவளுக்கு எவ்வளவு துணிச்சல் இருக்கவேண்டும் என்று பிரமித்துப் போனான்.

அதற்குள் அவள் இரண்டாம் குடம் தண்ணீர் எடுக்கத் திரும்பவும் வந்து கொண்டிருந்தாள். வந்தவள் இப்போதும் அவன் அருகில் நின்று, "நீங்க இலங்கைச் சீமையிலேருந்து எப்போ வந்தீங்க?" என்று கேட்டாள்.

இது அவனை நிஜமாகவே தூக்கிவாரிப் போட்டுவிட்டது. 'என்னடா இது? இவளுக்குத் தன் விஷயம் எப்படித் தெரிந்தது?' என்ற ஆச்சரியத்துடன், "ஏனம்மா, அப்படிக் கேட்டாய்?" என்றான்.

"இல்லே, நீங்க சட்டையும் போட்டுக்கிட்டு, கையிலே கெடியாரமும் கட்டிக்கிட்டு இருக்கிறதைப் பார்த்தா, இப்பத்தான் கொளும்பிலேருந்து ஊருக்கு வந்து சிமிட்டிக்கிட்டு இருக்காப்போலத் தெரியுது!" என்றாள்.

இது கந்தசாமியை அடியோடு தளர்த்தி விட்டது. எதிர்த்து ஒன்றும் சொல்ல முடியவில்லை. மறுபடியும் தன் கோழைப் புத்தியை நொந்து கொண்டான். இவளிடம் பேச்சே உதவாது என்று எண்ணினான். ஆனாலும், 'சரி தொலைந்து போறான்' என்று நினைத்து, "வந்து மூணு நாளாகுது!" என்றான் கம்பிய குரலில்.

"சரிதான்!" என்று சொல்லிவிட்டு ஒரு சிங்கார நடை நடந்து சென்றாள் அந்தப் பொல்லாதவள்!

## 2

நின்றாகக் கருக்கலிட்டுவிட்டது. கால்வாயில் இடை முறிந்து கிடந்த தண்ணீரெல்லாம் ஒன்று சேர்ந்து லேசாக ஓட ஆரம்பித்தது. மேலே போனவர்களைப் பற்றிக் கந்தசாமிக்கு நல்ல மதிப்பு உண்டாயிற்று. மடைகளையெல்லாம் நன்றாக அடைத்து அணைக்கட்டிலிருந்து தண்ணீரை மடக்கிக் கீழே விட்டிருக்கிறார்கள்; இனிமேல் கீழே உள்ள மடைகளில் காவல் இருப்பவர்கள ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டான்.

வரவரக் கால்வாயில் தண்ணீர் பெருகிற்று. பின்பு நுங்கும் நுரையுமாய் வரலாயிற்று. மேல்வானிலும் நிலவு கால் வீச ஆரம்பித்தது. அந்தச் சமயத்தில் குறிச்சியூரைச் சேர்ந்த ஒருவன் அங்கே வந்து, "என்ன அண்ணே, மடை காவலா? தண்ணீ அடிச்சித் தள்ளிக்கிட்டு வாராப்போல இருக்கே!" என்றான்.

"ஆமாம், கீழே போய்ச் சேர வேண்டாமா? நாளைக்குள்ள போய்ச் சேரல்லையானா பயிர் பொழைக்கிறது மறுபொழைப்புத்தான்!" என்றான் கந்தசாமி.

"சரிதான், கொஞ்சம் தீப்பெட்டி கொடும், பீடி பத்த வைக்க!" என்று கந்தசாமியிடம் தீப்பெட்டி வாங்கி ஒரு துண்டு பீடியைப் பற்ற வைத்துக் கொண்டு மேலே பேச ஆரம்பித்தான் அவன்.

"என்ன அண்ணே, இந்த மடையிலே தனியாகவா இருக்கே? கூட ஒருத்தர் இருந்தா நல்லாயிருக்குமே!" என்றான் ஒரு மாதிரியாக.

"ஏன் தம்பி, அப்படிச் சொல்றே? குறிச்சியூர்க்காரர்கள் என்ன புலியா, சிங்கமா?" என்றான் கந்தசாமி விட்டுக் கொடுக்காமல்.

"அதுக்குச் சொல்லலே அண்ணே, இந்த வில்வ மரத்திலே ஒரு மோகினி இருக்குது!"

"அது என்னப்பா, மரத்திலே மோகினி இருக்குது என்கிறே?"

"மோகினி இல்லே, மோகினிப் பிசாசு! அது கொஞ்சம் சேட்டைக்காரப் பிசாசு!" என்றான் சாவதானமாகக் குறிச்சியூர்க்காரன்.

கந்தசாமிக்குத் 'திக்' என்றது. அவன் இலங்கையிலிருக்கும்போது பிசாசுகளைப் பற்றி அதிகம் கேள்விப்பட்டிருந்தான். ஆகவே 'மோகினிப் பிசாசு'





என்றதும் அவன் கேள்விப்பட்டிருந்த விஷயங்கள் எல்லாம் பளிச்சென்று தோன்றி அவனுக்கு நடுக்கத்தைக் கொடுத்தன.

இருந்தாலும் துணிவை இழக்காமல், "அப்படியா! எவ்வளவு காலமாய் இந்த மரத்திலே அந்த மோகினி இருக்குது?" என்று கேட்டான்.

"இப்போதான் — ஓர் ஏழெட்டு வருஷ காலம் இருக்கும். இந்த வில்வ மரத்துக்கும், அதோ களத்து மேட்டிலே நிக்குதே பனியமரம், அதுக்கும் பாய்ச்சல்! இந்த ஊரிலே பொறந்த பொண்ணுதான் அவள். கெங்கம்மான்னு பேரு. இஷ்டமில்லாத ஒருத்தனுக்குக் கட்டிக்கொடுத்துப்புட்டாங்க. அதனாலே அதுக்கு ஒரே வெருத்தமாப் போச்சு. அடிக்கொருதரம் கட்டினவங்கூடச் சண்டை போடும். ஒரு நாள் ராத்திரி அந்தக் களத்துமேடு இல்லே — அங்கே, அந்தப் புளிய மரத்துக்குப் பக்கத்திலே சூடு அடிச்சிக்கிட்டு நின்னுங்க. இந்த மாதிரிதான் நல்ல நிலா வெளிச்சம். ஏதோ எப்போதும் போலச் சண்டை வந்துதாங்காட்டியும் — அந்த மடையன் காலு அடி அடிக்கப்புட்டான். அவ்வளவுதான்; குடுகுடுன்னு ஓடி வந்து இந்த மடையிலேருந்து வாய்க்காலிலே கிடந்த கிடங்கிலே விழுந்துச் செத்துப் போச்சு! அதிலேருந்து ராத்திரி வேளையிலே இந்தப் பக்கமா வர யாருக்கும் கொஞ்சம் அச்சந்தான். இன்னிக்கும் தெரிஞ்ச பொம்பிளைங்களைப் பார்த்தா அது 'அக்கா — தங்கச்சி'ன்னு கூப்பிட்டுக்கிட்டு இருக்கு......!"

கந்தசாமி உள்ளுக்குள் ஏற்பட்ட அதிர்ச்சியைக் கொஞ்சங்கூடக் காட்டிக் கொள்ளவில்லை. ஒரு பீடியை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டான். குறிச்சியூர்க்காரனுக்கும் ஒரு பீடி கொடுத்தான். பீடியைக் கண்டதும் உற்சாகமாய் மேலும் சொல்ல ஆரம்பித்தான் குறிச்சியூரான்.

"பாரேன் அண்ணே, ஒரு நாள் ராத்திரி பத்துப் பதினொரு மணி சுமாருக்கு வயலுக்குத் தண்ணி அடைச்சிட்டு மம்பட்டியைத் தோளிலே போட்டுக்கிட்டுக் கரை வழியா வந்துக்கிட்டிருக்கேன். திடீர்னு ஒரு பொண்ணுருவம் 'சலுக், சலுக்'குன்னு என் முன்னாலே நடந்து போச்சு. அப்போதும் இப்படி நிலா வெளிச்சந்தான். ஆனா மேவக் கூட்டத்திலே நிலவு மறைஞ்சி மறைஞ்சி அடிச்சிக்கிட்டிருந்தது. எனக்குச் சடக்குன்னு அது யாருன்னு தெரிஞ்சு போச்சு. மம்பட்டி வேறே கையிலே இருக்குதா? கிட்ட வந்தா பார்த்துக்கிடலாம்ன்னு நிக்காமல் வந்துக்கிட்டிருக்கேன். இந்த மடைகிட்டே வந்ததும் 'தொபுக்'குன்னு ஒரு சத்தம் கேட்டுச்சு. அவ்வளவுதான்; அப்புறம் அந்த உருவத்தைக் காணல்லே. நான் பாட்டிலே நிக்காமல் போய் ஊர்கிட்டே போனதும் மெள்ளமாத் திரும்பி மடையைப் பார்த்தா, மடை மேலே நல்லா லெட்சணமாப் புடவை ரவிக்கை எல்லாம் உடுத்திக்கிட்டு ஒரு கல்யாணப் பொண்ணு மாதிரி அது உட்கார்ந்துகிட்டு இருக்கு! எனக்கு அரட்டிப் பிடிச்சுட்டுது. நேரே வூட்டுலே போய்ப் படுத்தவன்தான்; மூணுநாளா உடாத காய்ச்சல். அப்படிப்பட்டவளாக்கும் அவள்!...... அதுக்கு வெத்திலே பாக்குமேலே ரொம்ப இஷ்டம். 'சுண்ணாம்பு இருக்குதா? — சுண்ணாம்பு இருக்குதா?'ன்னு ஆள்களிடம் கேட்கிற வழக்கம் உண்டு."

இவ்வாறு சொல்லிவிட்டு அவன் போய் விட்டான். மணி அப்போது பத்துக்கு மேலாகி விட்டது. குறிச்சியூர் 'கப்சிப்' என்று அடங்கி விட்டது. கந்தசாமி எழுந்து மடை வழியாகக் கீழே ஏதாவது தண்ணீர் போகிறதா என்று கவனித்தான். பசியும் உண்டாகி விட்டதால் கொண்டு வந்திருந்த புளியஞ் சாதத்தை அவிழ்த்துச் சாப்பிட்டான். பின்பு ஒரு பீடியைப் பற்ற வைத்துக் கொண்டு ஜமக்காளத்தின் மீது உட்கார்ந்தான்.

சாப்பிட்ட மயக்கத்தில் தூக்கம் கண்களைச் சுழற்றத்தான் செய்தது. இருந்தாலும் தூக்கத்துக்கு இடம் கொடுக்கக் கூடாதென்று மேலும் மேலும் பீடியைக் காலி செய்யலானான். அன்று முழுவதும் மனசுக்குப் பிடிக்காதபடி காரியங்கள் நடந்து வருவதைப் பற்றிச் சிந்தித்தான். மாலையில் ஒரு போக்கிரிப் பெண் வந்து ஏதேதோ வார்த்தையாடினாள்! இப்போது ஒருவன் வந்து பெரிய கதை சொன்னான். இவளைப்பற்றி அவனுக்குப் பலமான சந்தேகம் ஏற்பட்டது. 'மடை காவல்காரன் எப்படி என்று உளவு

தெரிய வந்தவனாக இருக்கப்படாதா? பிசாசுக் கதை சொல்லக் காரணமென்ன? உண்மையாக அப்படி ஒரு மோகினிப் பிசாசு அங்கே இருக்கிறதா? அல்லது கயிறு திரித்தானா? தூங்குகிற சமயத்தில் மடைப் பலகை பூராவையும் தூக்கித் தண்ணீரைக் கொண்டு போய் விட்டால்......?''

இப்படியாகச் சிந்தித்த வண்ணம் கொட்டு கொட்டு என்று விழித்துக் கொண்டிருந்தான் காவல் கந்தசாமி.

3

சற்று நேரம் கழிந்தது. தலை அதிகமாகக் கனக்க ஆரம்பித்தது. கொஞ்சம் தலையைச் சாய்த்து எழுந்திருக்கலாம் என்று எண்ணித் தலைக்கு உயரமாகக் கையை வைத்துக் கொண்டு படுத்தான்.

படுத்து ஒரு ஐந்து நிமிஷம் இருக்கும். தூங்கிப் போய்விடக் கூடாது என்ற எண்ணம் வேறு இருக்கிறதா? பூரணமாக அவனுக்குத் தூக்கம் வரவில்லை. அப்போது 'சலுக், சலுக்' என்று ஒரு சத்தம் லேசாக வந்தது. எங்கும் நிசப்தமாக இருந்ததால் அந்தச் சத்தம் அவன் காதில் நன்றாகவும் பட்டது. கண்ணைத் தூக்கம் இறுக்கிக் கொண்டிருந்ததால் திறக்கவும் முடியவில்லை. கண்ணைத் திறக்க முயலுகிறான்; ஆனால் தூக்கம் கண்ணை அழுத்துகிறது. இப்படி மன்றாடிக் கொண்டிருக்கையில் ஓர் உருவம் வந்து அவன் தலைமாட்டில் பேசாமல் நின்று கொண்டிருந்தது தெரிந்தது. நிலா வெளிச்சம் பட்டப் பகல் போலக் காய்ந்து கொண்டிருந்தது. அதோடு மரக்கொழுந்து வாசனை வேறு 'கம்' மென்று அடித்தது. கொஞ்சம் கொஞ்சமாய் அவனுக்குத் தூக்கம் கலைய ஆரம்பித்தது. ஆனாலும் எழுந்து 'அது யார்?' என்று பார்க்கத் துணிச்சல் உண்டாகவில்லை.

ஒரு சமயம் தூக்கத்தில்தான் கனவு காண்கிறோமா என்று நினைத்து உடம்பைக் கிள்ளிப் பார்த்தான். கனவில்தான் இருப்பதாகப் பட்டது. பின் என்னடா இது என்று கண் விழித்துப் பார்க்கையில் தலைமாட்டில் நின்று கொண்டிருந்த உருவத்தைக் காணவில்லை!

உடனே அவனுக்கு வேர்த்துக் கொட்டிற்று. மயிர்க்கால்களெல்லாம் குத்திட்டு நின்றன. மல்லாந்து படுத்திருந்தவன், புரண்டு ஒருச்சாய்ந்து படுத்தான். இப்போது கொஞ்ச தூரம் தள்ளி அந்த உருவம் எழுந்தது. கந்தசாமிக்குச் சிதறி நின்ற தைரியம் எல்லாம் ஒன்று கூடியது. "யார் அது?'' என்று கேட்டு விட்டான்.



"நான்தான் செங்கம்மா!" என்று பதில் வந்தது!

"என்ன அது! பேர் செங்கம்மாவா!" என்று வாய் உளறிய வண்ணம் அடித்துப் புரண்டுகொண்டு எழுந்து உட்கார்ந்தான் கந்தசாமி. கூர்ந்து கவனித்ததில் மாலையில் அவனோடு பேசிய பெண் மாதிரியே தோற்றம் இருந்தது.

"என்ன, உன் பேர் செங்கம்மாவா? நிஜமாகவா!" என்றான் கந்தசாமி மீண்டும் நடுக்கத்துடன்.

"ஆமாம், நிஜம்மாத்தான்! செங்கம்மா தான்!" என்றது அது சாவதானமாக.

"இந்த இருட்டிலே தனியாக ஏன் இங்கே வந்தே......?"

"வந்தேன்......எனக்கு என்ன பயம்? பகலும் ஒண்ணுதான், இரவும் ஒண்ணுதான்! நீங்க தூங்குறீங்களே, எழுப்பக் கூடாதுன்னு இருந்தேன். உங்களிடம் சில சேதி பேசணும்.........ஹூம்......... வெத்திலே பாக்கு வேணுமா இருக்கு...... சுண்ணாம்பு இருக்குதா, உங்ககிட்டே?"

'சரி: இப்போது சந்தேகமேயில்லை. இது அந்த வில்வ மரத்தில் இருக்கும் மோஹினிதான். அவன் சொன்னது போல இது சுண்ணாம்பு வேறே கேட்டு விட்டதல்லவா?" என்று மிரண்டு போய் விழித்தான் கந்தசாமி. எழுந்து ஊரைப் பார்த்து ஓடலாமா என்றுகூட அவனுக்குத் தோன்றியது. இருந்தாலும், "சுண்ணாம்பு என்னிடம் ஏது?" என்றான் மெதுவாக.

"சரி, சுண்ணாம்பு இல்லாவிட்டால் போகுது. உங்களைப் பார்த்த பிறகு என் மனசு கொஞ்சம் ஆறுதல் அடைஞ்சிருக்குதே, அதுவே போதும், எனக்கு!...... ஹூம்.........அதோ பாருங்க, களத்து மேட்டிலே நிக்கும் புளிய மரத்தை......!"

கந்தசாமியின் உடம்பு 'வெடவெட' என்று நடுங்க ஆரம்பித்தது. நாக்கு அடியோடு வரண்டு போயிற்று. அவன் வெகு வேகமாக மூச்சு விட ஆரம்பித்தான்.

மோஹினி மேலும் சொல்லிற்று: "இங்கேயிருந்து அங்கே அஞ்சு பாய்ச்சலில் போய் விடலாம். அந்தப் புளிய மரத்திலேதான் என் வயலிருக்கு. இந்த மடை பாசனம். வயலுக்குத் தண்ணி நல்லாப் பாய்ஞ்சு ஒரு மாசத்துக்கு மேலாகுது. அதக்குள்ள தண்ணித் தட்டு வந்து தொலைஞ்சுது. அந்த வயலைக் கொண்டுதான் என் ஜீவனம் நடக்குது!"

அவன் ஊமைபோல் ஏதும் பேசாமல் நடுங்கிக் கொண்டிருந்தான். இன்னும் அது என்ன செய்யப் போகிறதோ என்ற திகில் அவனைக் கிடுகிடு வென்று ஆட்டிக் கொண்டிருந்தது.

"என்ன, நான் சொல்லது உங்களுக்குக் கேட்குதா? தடுத்து மடுத்து ஒண்ணும் சொல்லக் காணோமே! என்னடா, இந்தப் பொண்ணுக்கு இவ்வளவு துணிச்சல்; நடுச்சாமத்திலே வந்து கதை பேசுறாளேன்னு யோசிக்கிறீங்களா? என் கதையைக் கேட்டால் உங்களுக்குத் தன்னாலே இரக்கம் உண்டாகும். அப்படியும் உண்டாகாமற் போனா இந்த மடையிலே விழுந்து செத்து வைக்க வேண்டியதுதான்!" என்றது அந்த மோஹினி கண்ணைக் கசக்கிக்கொண்டு.

இப்போதுதான் அவன் மனசில் இன்னதென்று விவரிக்க முடியாதபடி ஓர் உணர்ச்சி உண்டாயிற்று. சந்தேகம் துளியும் இல்லை; அவன் ஒரு மோஹினிப் பிசாசுடன்தான் பேசிக் கொண்டிருக்கிறான்!! ஆனால் அடுத்த நிமிஷம் அது என்ன செய்யப் போகிறது என்று அவனுக்குத் தெரியாது. இந்த நிலையில் துணிவை இழந்தால் போச்சு காரியம் என்ற எண்ணத்துடன், "நீ ஏன் செத்து வைக்கப் போறே? உனக்கு என்ன நேர்ந்து போச்சு?" என்று கேட்டான்.



"இப்போதாவது உங்களுக்கு மனசு திரும்பிச்சே! வேண்டாத கல்யாணத்தைப் பண்ணிக்கிட்டா யாருக்கு என்ன லாபம் சொல்லுங்கோ? மனசுக்குத் துளிக்கூட

இஷ்டம் இல்லாத ஒருத்தனைக் கட்டிக் கொள்ள நேர்ந்து போச்சுதானால், இந்த மடையிலே விழுந்து சாகிறதைத் தவிர வேறு ஏதாவது வழி இருந்தா அதையும் சொல்லுங்கோ!'' என்று கேட்டது.

'ஹூம்' என்று ஒரு பெருமூச்சு விட்டான் கந்தசாமி. என்னத்தைச் சொல்லுகிறது? அவன் உடம்புதான் வெள்ளக்காடாய் வேர்த்தது! இந்தச் சமயத்தில் அந்தக் 'கெங்கம்மா' எழுந்து அவனுக்குச் சற்று அருகில் வந்து உட்கார்ந்தது. அது எழுந்தபோது அதனுடைய பாதங்களை உற்று நோக்கினான் கந்தசாமி. பேய் பிசாசுகளின் பாதங்கள் தரையில் தோயாது என்று அவன் கேள்விப்பட்டிருந்தான். ஆனால் நிலவு வெளிச்ச மாகையால் பாதங்கள் தரையில் பட்டதா, இல்லையா என்பதைச் சரியாகக் கவனிக்க முடியவில்லை.

''தலைக்கு மேல் வெள்ளம் போய் விட்டது; இனிமேல் சாண் போனால் என்ன, முழம் போனால் என்ன?'' என்று ஒரு பழமொழி சொல்லுவார்களே, அம்மாதிரி ஆகிவிட்டது அவனுடைய நிலைமை. அதற்கேற்றாற் போல் 'கெங்கம்மா'வும் அவனை விடுவதாயில்லை. அது அருகில் வந்து உட்கார்ந்து கொண்டு மேலும் பேச ஆரம்பித்தது:

''இதோ பாருங்க! சாயந்திரம் உங்களைப் பார்த்ததிலேயிருந்து எப்போ இருட்டும், இருட்டும்னு காத்துக்கிட்டிருந்தேன். உங்களை எனக்கு இலங்கையிலேயே தெரியும். அதுதான் இலங்கையிலேருந்து எப்போ வந்தீங்கன்னு கேட்டேன்! கொளும்பு, கொள்பெட்டி, கிரீன்பாத் ரோட்டுச் சந்தியிலே நாங்கள் குடியிருந்தோம். நீங்க அந்தச் சந்து தெருவிலேயிருந்து அந்த வெள்ளைக்காரன் வீட்டுக்குப் போவீங்க! தினம் நான் உங்களைப் பார்க்கத் தவறமாட்டேன். அப்படிப் பார்த்த உங்களைத் திடீர்னு இந்த இடத்திலே பார்த்ததும் என் மனசிலே என்னென்ன எண்ணமெல்லாமோ வந்தது.........''

''அப்படியா! அதுதானே பார்த்தேன்! ஆமாம், நீங்கள் எப்போ இந்த ஊருக்கு வந்தீங்க, கொளும்பிலிருந்து?'' என்று ஆச்சரியத்துடன் ஒரு கேள்வி போட்டான் கந்தசாமி. ஏனெனில்



அவன் கொளும்பில் வேலை செய்து கொண்டிருந்த இடத்தையும் குடியிருந்த இடத்தையும் கணக்காகச் சொல்லி விட்டதில் அவனுக்கு ஒரு வித மயக்கமும் பயத்தெளிவும் ஏற்பட்டது. இருந்தாலும் பேய் பிசாசுகள் என்ன தான் சொல்லாது?

''எங்க அப்பன் என்னை மட்டும் ஊருக்கு அனுப்பி வச்சுட்டுது. அதாவது, எங்க அப்பனோட தங்கச்சிபுள்ளை ஒருத்தன் இருக்கான். அந்தத் தடியனுக்கு என்னைக் கலியாணம் பண்ணிக் கொடுக்க எனக்குத் துணையா அப்பனைப் பெத்த பாட்டி மட்டும் இங்கே வந்திருக்கா. அந்தத் தடியனை நினைச்சாலே பயமாயிருக்கு. அவனோட போக்கிரிக் கிராப்பும், முண்டாசுக்கட்டும் — ஐயய்ய, சகிக்கல்லே! அவனைப் பத்தி அந்தக் கிழவி கிட்டே சொல்லப் போனால் 'அத்தை புள்ளை ஆசையோட ஏதாவது சொன்னு கேட்டுக் கோடி'ங்கிறு! எங்க அப்பனுக்கும் அம்மைக்கும் எத்தனையோ கடிதாசி எழுதிப் போட்டுட்டேன்; பதில் இல்லை. இப்படி இருக்குது சங்கதி. அந்தப் புளியமரத்தடி வயலை நான் பயிர் செய்கிறேன். அதுக்கோ தண்ணி பாய்ச்சி மாசம் ஒண்ணாகுது. மத்தவங்க ஓடையிலேருந்து தண்ணி இறைக்கிறாங்க. நான் என்ன பண்ணுவேன்? என்னோட வயல் மாத்திரம்தான் காய்ஞ்சி கனல் பறந்து கிடக்குது!'' என்று சொல்லிவிட்டுக் கண்ணைத் துடைத்துக் கொண்டது அந்தக் கெங்கம்மா!

இதெல்லாம் உண்மைதானா என்று கந்தசாமிக்குப் பெரிய மயக்கம் ஏற்பட்டது. இன்னும் கனவோடுதான் இருக்கிறோமா என்று தொடையைக் கிள்ளிப் பார்த்துக் கொண்டான். கனவு இல்லை; நனவுதான். அவளை நன்றாக உற்றுக் கவனித்தான். சந்தேகம் இல்லை; மாலையில் தன்னோடு வின்னியாசமாக வார்த்தையாடிய பெண்ணைப் போலவே பட்டது.

''ஆமாம், உனக்குப் பயமாக இல்லையா? இப்படி நடு சாமத்திலே பயமில்லாமல் வந்திருக்காயே! யாராவது உன்னைப் பார்த்து விட்டால்......?''

''இந்தக் குறிச்சியூர்க்காரர்கள் தானே? சுத்தப் பயந்தாங் கொள்ளிகள்! நான் ஒண்ணுக்கும் பயப்படுவது கிடையாது.

எத்தனையோ ராத்திரி தனியா இங்கே வந்து அழுதுகிட்டிருந்திருக்கேன். யாரோ ஒருத்தி ரொம்ப வருஷத்துக்கு முந்தி இந்த மண்டபத்திலே யிருந்து விழுந்து செத்துப் போயிட்டாளாம். அதுமாதிரி எனக்கும் செத்துப் போகணும்னு ஆசை! வேண்டாதவனைக் கட்டிக்கிட்டு யாராலே மாரடிக்க முடியும்......?'' என்று சொல்லிவிட்டுச் சற்று நிறுத்தினாள். பின்பு மேலும் தொடர்ந்து, ''நீங்க எனக்குச் செய்ய வேண்டிய புண்ணியம் இதுதான்: என் வயலுக்குக் கொஞ்சம் மடையைத் திறந்து தண்ணீர் விடணும். இப்போது அடிக்கிற வெய்யிலில் இன்னும் ரெண்டு நாளாகிவிட்டால் பயிர்கள் தீய்ஞ்சே போயிடும்'' என்று அழமாட்டாக் குறையாகச் சொன்னாள்.

கந்தசாமிக்கு ஏற்பட்ட நிலைமையோடு இது பெரிய தர்ம சங்கடமாகவும் போய் விட்டது. உண்மையாகவே அவள் வயலுக்குத் தண்ணீர் வேண்டுமா, அல்லது ஏதாவது கபட நாடகமா என்று தத்தளித்தான். 'அவள்' இருந்த நிலையில் கொளும்புக்குப் போய் வந்த பெண் என்பது உண்மையாக இருக்கும்போல் பட்டது. அது உண்மையாக இருந்தால் அவள் உதவி இல்லாத பெண்தான். தண்ணீரோ கால்வாய் இருகரையும் பெருகிப் போகிறது. கொஞ்சம் தண்ணீர் திறந்து விட்டால் பாதகம் இல்லை என்று எண்ணியவனாய், ஜமக்காளத்தை விட்டு எழுந்து போய் மடையைக் கொஞ்சம் திறந்து வைத்தான். செங்கம்மாவுக்குச் சொல்ல முடியாத சந்தோஷம். தண்ணீர் தன் வயலைத் தவிர வேறு எங்காவது போகிறதா என்று பார்த்துவிட்டுத் திரும்பவும் வந்து பழைய இடத்தில் உட்கார்ந்து கொண்டாள்.

இந்தச் சமயத்தில் கிழக்கே கரைத் திருப்பத்தில் ஆள் அரவமும் லாந்தல் வெளிச்சமும் தெரிந்தது. ''செங்கம்மா, அதோ பார்! கூட்டமாகச் சலங்க வாராப் போல் தெரியுது!'' என்றான். கொஞ்சம் நிதானித்த பிறகு அவர்கள் ரோந்து வருகிற போலீஸ்காரர்கள் என்று கண்டுபிடித்தான். அவனுக்கு இன்னும் ஆபத்து! அந்தப் பெண்ணையும் அவனோடு பார்த்தால் அவர்கள் என்ன நினைப்பார்கள்? நிலவு



வேறு பட்டப் பகல் போலக் காய்ந்து கொண்டிருந்தது. போலீஸ்காரர்கள் நெருங்கி வந்து விட்டார்கள். அவள் திரும்பிக் கிராமத்துக்குப் போகிறது என்றாலும் அவர்கள் கண்ணில் படாமல் போக முடியாது. ஆகையால், ''செங்கம்மா, போலீசுக்காரர்கள் ரோந்து வாராங்க. நீ என்ன செய்யப்போறே?'' என்று மிகவும் பதட்டத்துடன் கேட்டான்.

''நீங்க ஒண்ணும் பயப்படாதீங்கன்னு! இதோ, கம்ப வில்வமரம் இருக்குது!'' என்று சொல்லிய வண்ணம் பளிச் சென்று அந்த வில்வமரத்தில் ஏறி மறைந்து கொண்டாள் அவள்.

கந்தசாமி அந்தச் சமயத்தில் போய்த் திறந்து வைத்திருந்த மடையை எப்படி அடைக்க முடியும்? ஆகவே, ஒன்றும் செய்யத் தோன்றாமல் ஜமக்காளத்தில் வந்து படுத்து மேல் துண்டால் நன்றாகப் போர்த்துக்கொண்டு தூங்குகிறவனைப் போல் பாசாங்கு செய்தான்.

போலீஸ்காரர்கள் வந்ததும் மடையைப்போய்ப் பார்த்தார்கள். மடை திறந்திருந்ததைக் கண்டதும் அவர்களுக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது. மடையைச் 'சிக்'கென்று இறுக்கிக் கொண்டியைப் போட்டுவிட்டு, ''யார் ஐயா, இந்த மடையைக் காவல் காப்பது? கல்ல சூரப் புலி! காவலைப் பாரு, காவலை!'' என்று சொல்லிக் கொண்டு அவனைத் தட்டி எழுப்பினார்கள். அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தான் கந்தசாமி.

''ஏன் ஐயா, மகா காவல் பண்ணிப் புட்டே நீ! கல்லாத் தூங்கையா தூங்கு! நீ தூங்கிகிட்டிருக்கையிலே யாரோ இந்த ஊர்க்காரன் ஒருத்தன் வந்து மடையைத் தொறந்து தண்ணியைக் கிழே மடமடன்னு பாய்ச்சிக்கிட்டிருக்கான், ஐயா!'' என்றான் அவர்களில் ஒருவன்.

''அப்படியா? இப்பத்தானே நான் கொஞ்சம் கண் அயர்ந்தேன்! அதுக்குள்ள படுகாலிப் பசங்க வேலையைப் பார்த்தீங்களா?'' என்று எழுந்து போய் மடையைப் பார்த்தான் கந்தசாமி.

''இங்கேதான் வயல் வரப்பில் பயிருக்கு மத்தியில் அவன் ஒளிஞ்சிகிட்டிருக்கணும்!'' என்று சொல்லிக்கொண்டு, வயலுக்குள் இறங்கி 'ஆ, கள்



என்று சத்தம் போட்டார்கள் போலீஸ்காரர்கள். எங்கே அந்தப் பெண் மரத்தில் இருப்பதைக் கண்டு பிடித்து விடப் போகிறார்களோ என்று கந்தசாமிக்கு ஒரே கிலி. அவனும் போலீஸ்காரர்களோடு சேர்ந்து வயலில் ஒளிந்து கொண்டிருக்கும்(!) திருடனைத் தேடிப் பார்த்தான்! கடைசியில் போலீஸ்காரர்கள் அவனைப் பலமாக எச்சரித்துவிட்டுக் கரை வழியாக மேலே கடந்து சென்றார்கள்.

அவர்கள் தலை மறைந்த பின்பு, "செங்கம்மா! போலீஸ்காரர்கள் போய்விட்டார்கள். கீழே இறங்கி வா!" என்று கந்தசாமி கூப்பிட்டான். என்ன ஆச்சரியம்! மரத்தில் ஏறியிருந்த செங்கம்மாவைக் காணவில்லை!!

அவன் மன நிலை எப்படி இருக்கும்? அவனோடு இந்தக் கூத்து நடத்தியது பெண்ணா, பேயா? படுக்கையும் கொள்ளவில்லை; இருக்கவும் முடியவில்லை அவனுக்கு. இடுப்பில் இருந்த மடக்குக் கத்தியைக் கையில் எடுத்துக் கொண்டு அங்கும் இங்கும் உலவினான். நெடு நேரம் யோசித்ததில் அது பேயாக இருக்க முடியாது என்று ஒரு தினுசாக நிச்சயம் செய்து கொண்டு, மடைக்கு வெகு அருகில் ஜமக்காளத்தை எடுத்து விரித்துத் தூங்கிப் போனான்.

## 4

கந்தசாமி தூக்கம் கலைந்து எழுந்திருக்கையில் மணி ஐந்து. நன்றாகக் குளித்துவிட்டுக் கரையில் வேட்டியை உலர்த்திக் கொண்டு நின்றான். கொஞ்சம் கொஞ்சமாக விடிந்து வந்தது. கிராமத்திலிருந்து வயலுக்கும் மற்ற வேலைகளுக்கும் ஜனங்கள் செல்ல ஆரம்பித்தார்கள்.

கந்தசாமி யாரை ஆவலுடன் எதிர் பார்த்திருந்தானோ அவளும் வந்தாள். செப்புக்குடத்துடன் ஒய்யாரமாக நடந்து வந்த அவள், அவனை அறிந்ததும் ராங்கியாக முகத்தைத் திருப்பிக்கொண்டு 'விறு விறு' என்று நடக்க ஆரம்பித்தாள்.

"என்ன, உன்னைத்தானே?" என்றான் கந்தசாமி. அவளும் நின்றாள். "ஆமாம், நேத்து ராத்திரி எப்படித் தப்பிப் போனே?" என்று கேட்டான்.

"நேத்து ராத்திரி தப்பிப் போனேனா? என்னாங்க நீங்க கேக்கறது? ஒண்ணும் புரியல்லையே!" என்றாள் அவள்.

"இல்லே, நீ ஒருவேளை இந்தப் பக்கமா வந்தியோன்னு கேட்டேன்!" என்று மழுப்பினான் கந்தசாமி.

முகத்தை ஒரு வலிப்பு வலித்துக் கொண்டு அவள் சென்றுவிட்டாள். கந்தசாமி ஒன்றுமே தோன்றாதவனாய் ஒரு கல்லின்மேல் உட்கார்ந்தான்.

"என்ன, மோகினிப் பிசாசு பிடிச்சாப் போலே உட்கார்ந்துகிட்டு இருக்கீங்க?" என்ற வார்த்தைகள் கேட்டுத் தலை நிமிர்ந்தான் கந்தசாமி. நிறை குடத்துடனும் நனைந்த சேலையுடனும் அவள் நின்று கொண்டிருந்தாள். குடலைக் கொண்டையில் மருக்கொழுந்து செருகியிருந்தாள். கந்தசாமிக்குப் புரிந்து விட்டது. "அப்படி வாம்மா, வழிக்கு! இனிமே மோகினி என்னைப் பிடிக்குதா, இல்லாட்டி நான் மோகினியைப் பிடிக்கிறேனா, பார்ப்போம்!" என்று சொல்லிக்கொண்டே எழுந்து நின்றான்.

கலகலவென்று நகைத்துக் கொண்டே ஓட்டமும் நடையுமாக நிறை குடம் தளும்பச் சென்றாள் மோகினி—தலையில் செருகியிருந்த மருக்கொழுந்து செண்டு கீழே விழுந்து விட்டதைக் கூடக் கவனிக்காமல்! அதைக் கையில் எடுத்து நுகர்ந்தவண்ணம், "நல்ல மருக்கொழுந்து மோகினி!" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான் கந்தசாமி.




# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 219. கண்டாள் கணையாழி!

அனுமனைக் கண்டதில் சீதைக்கு எவ்வளவோ ஆறுதல்தான். ஆனாலும் அவனும் ஒரு அரக்கனாக இருப்பானோ என்ற சந்தேகம் விட்டபாடாக இல்லை.

சீதையின் இந்த மன நிலையை அறிந்தவனாய்ப் பேசுகிறான் அனுமன். உறுதி பயப்பதான வார்த்தைகளை முதலில்ச் சொல்லுகிறான்.

"பிராட்டியே, ராமன் உன்னிடம் சொல்லும்படி சொன்ன விஷயங்களைக் கொஞ்சம் கேட்க வேண்டும்.

"அயோத்தியை விட்டுப் புறப்படும் போது ராமன் உன்னிடம் சொன்னது ஞாபகம் இருக்குமே. 'காட்டு வழியாக நடக்க முடியாது உன்னால். எல்லாம் கொஞ்ச காலம்தானே! என் தாய்மாருக்கு ஏதோ வேண்டிய பணியை இங்கேயே செய்து கொண்டிரு என்று சொல்ல:

சந்தம்

தான னன
தன்ன னன
தன்ன னன
தன் ன

நடத்தல் அரி
தாகும் நெறி,
நாள்கள் சில;
தா யர்க்(கு)
அடுத்த பணி
செய்(து)இ வண்
இருத்தி என,—
அச் சொற்(கு),

உடுத்த துகி
லோடும், உயிர்
உக்க உட
லோ டும்,
எடுத்த முனி
வோடும், அயல்
நின்ற தும்
இசைப் பாய்.

[நடத்தல் அரிதாகும் நெறி: வழியானது நடக்கமுடியாதபடி அவ்வளவு கஷ்டமானது: நாள்கள் சில; வனவாசம் போய் வருவதற்கான பதினாலு வருஷமும் பதினாலு நாளாக ஓடி விடும்; தாயர்க்கு அடுத்த பணி செய்து: என் தாய்மார்க்கு ஒத்ததான பணிவிடைகளைச் செய்து; இவண் இருத்தி என: இங்கேயே நீ இரு என்று சொல்ல; அச் சொற்கு: அப்படிச் சொன்ன சொல்லை அங்கீகரிக்காமல் நேர்மாறாய்; உடுத்த துகிலோடும்: உடுத்துவதற்கான ஒரே ஒரு ஆடையுடனேயே: உயிர் உக்க உடலோடும்: உயிர் போன உடலோ என்று எண்ணும்படியாக அவ்வளவு தளர்ந்த உடலோடும்; எடுத்த முனிவோடும்; அந்தத் தளர்ச்சியிலேயே மேலிட்ட கோபத்தோடும்; அயல் நின்றதும்: பக்கத்தில் உடன் வருவதற்கு நின்றதையும்; இசைப்பாய்: சீதைக்குச் சொல்லுவாயாக என்று சொல்லி விட்டான் ராமன்.]

காட்டுக்கு உடன் வர நின்றது ஒரு விஷயம்.

இரண்டாவது விஷயம்: தசரத சக்கரவர்த்தியின் அன்பினால் ராஜரீகம் எனக்கு வந்தது. உடனே அதை நீ விட்டு நீங்கிக் காட்டுக்குப் போகும் போது அயோத்தியில் மதிலின் கோட்டை வாசலைக் கடக்கவில்லை. அதற்குள் ஒரு கேள்வி கேட்டாள் சீதை. அதையும் அவளிடம் சொல்

நீண்ட முடி
வேந்தன் அருள்
ஏந்தி நிறை
செல் வம்
பூண்(டு)அ தனை
நீங்கி நெறி
போதல் உறும்
நா ளில்
ஆண்ட நகர்
ஆரை யொடு
வாயில் அக
லா முன்,—
"யாண்டை யது
கான்"எ ன
இசைத்த தும்
இசைப் பாய்.

[நீண்ட முடி வேந்தன்: தசரதச் சக்கரவர்த்தியின்: அருள் ஏந்தி நிறை செல்வம் பூண்டு: அன்பின் காரணமாகப் பெரிய அரச பதவியை ஏற்று: அதனை நீங்கி நெறி போதல் உறு நாளில்: அந்த அரச பதவியை விட்டு நீங்கிக் காட்டின் மார்க்கத்தை நோக்கி வந்த போது: ஆண்ட நகர் ஆரையொடு: அயோத்தி நகரத்தின் மதிலின் வாசலைக் கடப்பதற்கு முன்: யாண்டையது கான் என: காடு வந்து விட்டதா? எங்கே இருக்கிறது அது என்று: இசைத்ததும் இசைப்பாய்: இனிமையாய்க் கேட்டாள். அதையும் சொல்வாயாக.]

மூன்றாவதாகவும் ஒருகாரியத்தைச் சீதைக்கு நினைப்பூட்டச் சொன்னான் ராமன். இந்த விஷயமும் ராமன் சொல்லாமல் அநுமனுக்குத் தெரிய ஏதுவில்லை.

ராமன், லக்ஷ்மணன், சீதை ஆகிய மூன்று பேரும் நள்ளிரவில் காட்டுக்குள்ப் பிரவேசித்து நடந்து போக வேண்டும். சுமந்திரனே தேரைத் திருப்பிக் கொண்டு போக வேண்டும் அயோத்திக்கு. ராமனிடம் விடை பெற்றுக் கொண்டான், எவ்வளவோ கஷ்டப்பட்டு. அடுத்தாற்போல் சீதையிடம் விடைபெற்றுக் கொள்வதற்காக, சமாசாரம் ஏதேனும் உண்டா என்ற குறிப்பில் நிற்கிறான். அதற்கு விடையாகச் சீதை சொன்னாள்:—"கிளியையும் மைனாவையும் நன்றாய் வளர்க்கும்படி தங்கைகளிடம் சொல்" என்றாள்;

அரண்மனையை விட்டு, நகரத்தை விட்டு உற்றார் உறவினரை விட்டுக் காட்டுக்குப் போகிறோமே என்ற எண்ணம் கொஞ்சம் கூட இல்லை அவளுக்கு. பச்சைக் குழந்தையாய்க் "கிளியையும் மைனாவையும் பார்த்துக் கொள்" என்று சொன்னாள். இதையும் அவளிடம் போய்ச் சொல்:— என்றான் ராமன்.

என்ன ரிய
தேர்த ரு
சுமந்தி ரன்
'இசைப் பாய்
வள்ளை மொழி
வாச கம்'
எனத்,து யர்
மறந் தான்
'கிள்ளை யொடு
பூவை கள்
வளர்த்தல் கிள
என் னும்
பின்னை யொடு
தன்தி றம்
உணர்த்து தி
பெயர்த் தும்

[என்னரிய தேர்தரு சுமந்திரன்: அபூர்வத் திறத்தோடு தேர் ஓட்டும் சுமந்திரனானவன்: இசைப்பாய் வள்ளை மொழி வாசகம் என: வள்ளைப் பாடல் போன்ற அவ்வளவு இனிய பேச்சை உடையவளே, சொல்ல வேண்டியவைகளைச் சொல்வாயாக என்று சொல்ல; (வாசகம்: சொல்ல வேண்டியதை: இசைப்பாய்: சொல்லி அருளுவாய்:) துயர் மறந்தான்: அயோத்தியை விட்டு வந்த துயரை மறந்தவனாய். கிள்ளையொடு பூவைகள் வளர்த்தல்: கிளியையும் மைனாவையும் ஜாக்கிரதையாக வளர்த்தலை; கிள என்னும் பின்னை யொடு: (தங்கைகளிடம்) சொல் என்ன பின்னையிடம் (சீதையிடம்): (கிள: சொல்) தன் திறம் உணர்த்துதி பெயர்த்தும்: அவளுடைய குழந்தைத் தன்மையைச் சேர்த்துத் தெரியப் படுத்து]

"உனக்குத் தெரியப்படுத்த வேண்டிய மூன்று விஷயங்களையும் ராமன் சொல்லி முடித்து விட்டான். வேறு வார்த்தை சொல்ல வேண்டியதில்லை" என்று சொல்லிச் சிறிது நேரம் பொறுத்து "என்னுடைய பெயரையே தீட்டியது. அரிய வேலைப்பாடு அமைந்தது. இதைப் பத்திரமாய்க்




### கணக்கு எப்படி?

நோயாளி:—டாக்டர் ஸார்! நான் பிழைப்பேனா?

டாக்டர்:—கட்டாயம் பிழைப்பீர்: நீர் அதைப் பற்றிக் கவலையே பட வேண்டாம்.

நோயாளி:—அதெப்படி அவ்வளவு நிச்சயமாய்ச் சொல்கிறீர்கள்?

டாக்டர்:—ஏன் சொல்லக் கூடாது? உமக்கு வந்திருக்கும் வியாதியினால் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர்தான் சாகிறார்கள் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். இதுவரை உமக்கு வந்திருக்கும் வியாதியினால் தொண்ணூற்றொன்பது பேர் இறந்திருக்கிறார்கள். ஆகவே, நீர் பிழைத்தே ஆகவேண்டும்!

★

### பார்த்ததில்லை!

ஒருவன்:—நீ போட்டிருக்கும் தேவதையின் படத்திற்கு ஏழு விரல்கள் போட்டிருக்கிறாயே. அப்படி ஒரு தேவதையை நீ பார்த்திருக்கிறாயா?

சித்திரக்காரன்:— நான் பார்த்ததில்லை: ஆனால், நீ ஐந்து விரல்களோடு ஒரு தேவதையைப் பார்த்திருக்கிறாயா?

★

### அதி புத்திசாலி!

ஆபீஸ் மானேஜர் புதிதாக வேலைக்கு ஒரு பையனைப் பொறுக்கி எடுத்தார்.

மானேஜர்:—எனக்கு வேண்டியது சுறுசுறுப்புள்ள பையன். ஆபீஸ் வேலையில் எப்போதும் கண்ணும் கருத்துமாயிருக்க வேண்டும். அதது இருக்க வேண்டிய இடத்தில் ஒழுங்காயிருக்கிறதா என்று பார்க்க வேண்டும். எது சற்று ஒதுங்கியிருந்தாலும் உடனே சரியாக வைக்க வேண்டும். என்ன, நான் சொல்வது தெரிகிறதா?

பையன்:—தெரிகிறது, ஸார்! உங்கள் 'டை'யை இப்போது சரியாக வைக்க வேண்டும்!

★

### யாருக்குக் கவலை?

நடு ராத்திரியில் சுந்தரம் எழுந்து உளறினான். அவன் மனைவி 'ஏன்?' என்று விசாரிக்க, "நாளைக்குப் பரமசிவம் பிள்ளைக்குப் பத்து ரூபாய் கடனைக் கொடுக்க வேண்டும். எப்படிக் கொடுப்பதென்று தெரியவில்லை. கவலையாக இருக்கிறது!"

"ரொம்ப நன்றாயிருக்கிறது! அவரல்லவா உங்களிடத்திலிருந்து கொடுத்த பணத்தை எப்படி வாங்குவதென்று கவலைப் பட வேண்டும்? நீங்கள் பேசாமல் படுத்துத் தூங்குங்கள்!' என்றாள் மனைவி.

---

கையில் கொடு என்று சொல்லிக் கொடுத்தான்" என்று சொல்லி விட்டுக் கையில் வைத்திருந்த ஒரு மோதிரத்தைக் காட்டினான்.

மீட்டும் உரை
 வேண்டு வன
இல்லை என,
 'மெய்ப் பேர்
தீட்டி யது
 தீட்ட ரிய
செய்கை யது,
 செவ் வே
நீட்(டு) இது' என
 நேர்ந்த னன்
எனா, நெ டிய
 கை யால்
காட்டி னன் ஓர்
 ஆழி அது
வான் நு தலி
 கண் டாள்.

[மெய்ப் பேர் தீட்டியது: உண்மையாக ராமன் என்ற பெயர் எழுதியுள்ளது: தீட்டரிய செய்கை அது: அபூர்வமான நகாசு வேலை செய்தது: செவ்வே நீட்டு இது என நேர்ந்தனன்: பத்திரமாய்க் கையில் கொடுப்பாயாக என்று சொன்னான்; எனா: என்று சொல்லி: நெடிய கையால் காட்டினன் ஓர் ஆழி: நீண்ட கையால் அநுமன் காட்டினான் ஒரு மோதிரத்தை: அது வான் நுதலி கண்டாள்: அந்த மோதிரத்தைக் கண்டு கொண்டாள் சீதை. கொஞ்சம் கூட எதிர்பார்க்காத விஷயத்தைக் கண்டாள்.]

சீதையின் பெண் தன்மையை இந்தச் செய்யுள்கள் அபூர்வமாய் விளக்குகின்றன. காட்டுக்குப் புறப்படும் கணவனோடு தானும் உடனடியாகப் புறப்படுகிறாள். மதிலைக் கடப்பதற்கு முன்னமேயே காடு வந்து விட்டதா என்கிறாள். இந்தக் குழந்தையின் மன நிலையை ஒத்த வண்ணமாக, (நகைகளையும் ஆடைகளையும் பத்திரப்படுத்தென்று சொல்லாமல்) கிளியையும் மைனாவையும் அருமையாய்ப் பாதுகாக்க வேண்டும் என்று சொல்லிவிடுகிறாள்.

இந்தச் சம்பவங்களிலுள்ள பெண் தன்மையின் அபூர்வமான அழகை ராமன் ரொம்ப ரொம்ப அனுபவித்திருக்கிறான். மனசை விட்டு அகலுவன அல்ல அது.

இந்த உண்மையை அறிவதில் சீதைக்கு ஆறுதல் எவ்வளவோ இருக்கும் அல்லவா?

# ☆ முதற்பாகக் கதை ☆

அகண்ட காவேரிக் கரையை யடுத்து ராஜம் பேட்டை என்ற ஒரு கிராமம் இருந்தது. அந்தக் கிராமத்தைச் சேர்ந்த பட்டா மணியம் கிட்டா வய்யர் நல்ல மனிதர்; பரோபகார சீலர்; சுற்றுப் புறங்களில் செல்வாக்கு உள்ளவர்.

கிட்டா வய்யருக்கு இரு சகோதரிகள். அவர்களில் அபயாம்பாள் பக்கத்தி லிருந்த கிராமத்தில் ஒரு வைதீக குடும்பத்தில் வாழ்க்கைப் பட்டிருந்தாள். ராஜம்மாளின் கணவர் துரைசாமி ஐயர் பம்பாயில் ரயில்வே உத்தியோகம் பார்த்து வந்தார்.

கிட்டா வய்யருக்குக் கங்காதரன், சூரிய நாராயணன், (சூரியா), சுப்பிரமணியன் (சுண்டு) என்னும் மூன்று புதல்வர்களும் லலிதா என்ற ஒரு குமாரியும் இருந்தனர். லலிதாவுக்கு விவாக வயது ஆகி யிருந்தது. அவளுக்குக் கலியாணம் செய்யக் கிட்டா வய்யர் தீவிரமாக வரன் தேடிக் கொண்டிருந்தபோது பம்பாய் ராஜம்மாளுக்கு உடம்பு அதிக அசௌக்கியம் என்று கடிதம் வந்தது.

சென்னை - பத்மாபுரத்தில் மாஜி ஸப் ஜட்ஜ் பத்மலோசன சாஸ்திரி சமூகப் பிரமுகர். அவருடைய குமாரன் சௌந்தர ராகவன் பி. ஏ. ஆனர்ஸ் தில்லி சர்க்காரின் பொருளாதார இலாகாவில் நல்ல உத்தியோகத்தில் இருந்தான். கிட்டா வய்யர் தன்னுடைய குமாரி லலிதாவுக்காக ராகவனை வரன் பார்த்தார். பையனை அவருக்குப் பிடித்திருந்தது. பிறகு கிட்டா வய்யர் பம்பாய்க்குத் தம்முடைய சகோதரி ராஜம்மாளைப் பார்க்கச் சென்றார்.

ராஜம்மாள் இல் வாழ்க்கையில் அவ்வளவு சந்தோஷத்தை அடைந்தவளல்ல. அவளுடைய புருஷன் துரைசாமி ஐயரின் ஒழுக்கத்தைப் பற்றியும் அவளுக்குப் பல ஐயங்கள் இருந்தன. அவளுடைய ஏக புதல்வி சீதாவிடம் உயிரை வைத்திருந்ததுடன் அவளை நல்ல இடத்தில் கலியாணம் செய்து கொடுத்து விட்டால் தான் நிம்மதியாகக் கண்ணை மூடலாம் என்று எண்ணி யிருந்தாள்.

ராஜம்மாள் நோயாகப் படுத்திருந்தபோது வடக்கத்தியானாகத் தோன்றிய ஒரு ஸ்திரீ வந்து ராஜம்மாளிடம் அவளுக்குத் தான் ஏதோ தீங்கு செய்து விட்டதாக மர்மமாகச் சொல்லி விட்டு, சீதாவின் கலியாணத்துக்காக இரண்டாயிரம் ரூபாய் பணமும் ஒரு விலை உயர்ந்த ரத்தின ஹாரமும் கொடுத்து விட்டுப் போனாள். அவளுடைய கைப் பையைத் திறந்தபோது எடுத்து வைத்த விசித்திரப் பிடியுள்ள கத்தி ராஜம்மாளுக்குப் பயங்கரத்தை உண்டாக்கியது.

கிட்டா வய்யர் ராஜம்மாளைத் தம்முடன் கிராமத்துக்கு அழைத்துப் போவதாகச் சொன்னார். வைத்தியம் செய்த டாக்டரும் துரைசாமி ஐயரும் வற்புறுத்தியதன் பேரில் ராஜம்மாள் சீதாவையும் அழைத்துக்கொண்டு கிட்டா வய்யருடன் ராஜம் பேட்டைக்குப் புறப்பட்டுச் சென்றாள்.

சௌந்தரராகவன் 1931-ல் கராச்சி காங்கிரஸின்போது தாரிணி என்னும் மங்கையைச் சந்தித்தான். தேசசேவிகை தாரிணி அவனுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டாள். கராச்சியிலிருந்து பம்பாய்க்குக் கப்பலில் பிரயாணம் செய்கையில் தாரிணிக்கும் ராகவனுக்கும் நட்பு முதிர்ந்தது.

ராகவனுடைய தாயார் காமாட்சி அம்மாள் அவனிடம் உயிரை வைத்திருந்தாள். அவளுடைய மூத்த நாட்டுப் பெண் மாமியாருடன் சண்டை போட்டுக் கொண்டு தன் புருஷனையும் அழைத்துக் கொண்டு தகப்பனார் வீட்டுக்குப் போய் விட்டாள். இதனால் மனமுடைந்திருந்த காமாட்சியம்மாள் ராகவனையே நம்பியிருந்தாள். அவன் சாதி தெரியாத வடநாட்டுத் தாரிணியை மணந்து கொள்வதென்பது அவளால் சகிக்க

முடியவில்லை. தாரிணி பத்மாபுரத்துக்கு வந்திருந்தபோது அவளிடம் காமாட்சி அம்மாள் ஏதேதோ சொல்லி ராகவனிடம் சொல்லிக் கொள்ளாமலே திரும்பிப் போகும்படி செய்து விட்டாள். தாரிணி ரயில் பிரயாணத்தின்போது எழுதிய கடிதத்தில் பீகார் பூகம்பத்தினால் கஷ்டப்பட்டவர்களுக்குச் சேவை செய்யப் போவதாகச் சௌந்தரராகவனுக்குத் தெரிவித்திருந்தாள்.

காமாட்சி அம்மாளின் தூண்டுதலின் பேரில் ராகவன் கிட்டாவய்யர் பெண்ணைப் பார்ப்பதற்காக ராஜம்பேட்டைக்கு வந்தான். அங்கே லலிதாவுடன் பம்பாய் சீதாவையும் பார்த்தான். சீதாவைத்தான் தனக்குப் பிடித்திருக்கிறது என்றும் பணங்காசு எதிர்பாராமல் அவளை மணந்து கொள்ளத் தயார் என்றும் தெரிவித்தான்.

லலிதாவின் தாயார் சரஸ்வதி அம்மாள் ஏற்கெனவே சீதா தன் குமாரியைவிட அழகாயும் சமர்த்தாகவும் இருப்பது பற்றி அசூயை கொண்டிருந்தாள். இப்போது அவளுடைய ஆக்ரோஷம் பொங்கிற்று. ஆனால் சீதாவிடம் அளவில்லாத சிநேகப்பற்றுக் கொண்டிருந்த லலிதா அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. சீதாவின் பக்கம் அவள் பலமாகப் பரிந்து பேசினாள்.

லலிதாவின் தமையன் சூரியா பிராயத்துக்கு மேற்பட்ட அறிவு முதிர்ச்சியுடையவன். அத்தை ராஜம்மாவிடமும் அத்தங்காள் சீதாவிடமும் அவனுக்கு அதிக அபிமானம். அவன் தன்னுடைய தாயாரைச் சாந்தப்படுத்தினான்.

சூரியா தேவபட்டணத்தில் படித்துக் கொண்டிருந்தான். அங்கே வக்கீல் ஆத்மநாதய்யரின் மகன் பட்டாபிராமன், சூரியாவுக்கு நெருங்கிய சிநேகிதன். பட்டாபிராமன் ஏற்கெனவே லலிதாவைப் பார்த்திருந்ததுடன் அவளை மணந்து கொள்ள விருப்பம் கொண்டிருந்தான். இதை அறிந்திருந்த சூரியா தன் பெற்றோர்களிடம் சொல்லி லலிதாவுக்கும் பட்டாபிராமனுக்கும் கலியாணம் நிச்சயம் பண்ணி வைத்தான்.

ஒரே பந்தலில் ஒரே முகூர்த்தத்தில் சீதா, லலிதா இருவருடைய கலியாணங்களும் நடைபெற்றன. எதிர்பார்த்தபடி துரைசாமி ஐயர் கலியாணத்துக்கு முதல் நாள் வந்து சேரவில்லை. ஆகையால் ராஜம்மாளின் தமக்கையும் அவள் கணவரும் சீதாவைச் சௌந்தரராகவனுக்குக் கன்னிகாதானம் செய்து கொடுத்தார்கள்.

முகூர்த்தத்துக்கு முதல்நாள் ராஜம்மாள் பெயருக்கு ஒரு தந்தி வந்தது. அதைச் சூரியா வாங்கிப் பிரித்துப் படித்தான். "சீதாவின் கலியாணத்தை நிறுத்திவிடவும்—துரைசாமி" என்று எழுதியிருந்தது. இதைப் பொய்த் தந்தி என்று சூரியா சந்தேகித்தபடியால், அதைப் பற்றி யாரிடமும் பிரஸ்தாபிக்கவில்லை.

சீதாவுக்கும் லலிதாவுக்கும் திருமாங்கல்ய தாரணம் நடந்த பதினைந்து நிமிஷத்துக்கெல்லாம் துரைசாமி ஐயர் வந்து சேர்ந்தார். அவரை முதலில் சூரியா வரவேற்றுக் கலியாணம் நடந்த சந்தோஷ சமாசாரத்தையும் சொன்னான். "என்னுடைய தந்தி வரவில்லையா?" என்று துரைசாமி ஐயர் பரபரப்புடன் கேட்டார். "சற்று முன்னால்தான் ஒரு தந்தி வந்தது. கலியாண தடபுடலில் அதைப் பிரித்துக்கூடப் பார்க்கவில்லை!" என்று சூரியா கூறித் தந்தியை அவரிடம் கொடுத்தான். அவர் அதைப் பிரித்துப் பார்த்து "இதுதான்!" என்று சொல்லித் தந்தியைக் கிழித்தெறிந்தார். "கடவுளுடைய சித்தம்; நாம் என்ன செய்யலாம்?" என்றார்.

தந்தையைப் பார்த்ததும் சீதா விம்மி விம்மி அழுதாள். ராகவன் அவளுடைய கரத்தைத் தொட்டு "சீதா!" என்றதும் அழுகை நின்றது.

பிறகு நாலு நாள் கலியாணமும் சிறப்பாகவும் குதூகலமாகவும் நடந்து முடிந்தது.

## முதல் அத்தியாயம்

# டில்லிப் பிரயாணம்

சென்னையிலிருந்து புறப்பட்டு நாற்பத்தெட்டு மணி நேரத்துக்கு மேலே யானபடியினால் உட்கார்ந்து உட்கார்ந்து சலித்துப் போன பிரயாணிகளைச் சுமக்க முடியாமல் சுமந்து கொண்டும் பெருமூச்சு விட்டுப் புகையையும் கரித்தூளையும் கக்கிக் கொண்டும் சில சமயம் வீல் என்று சததமிட்டு அலறிக் கொண்டும் கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ் என்னும் பெயரினால் பிரசித்தி பெற்ற நீராவித் தொடர் வண்டி தண்டவாளத்தின் மீது நீள நெடுகச் சென்றது.

டில்லி ஸ்டேஷன் வருவதற்கு இன்னும் ஒருமணி நேரந்தான் இருந்தது. என்றாலும் அந்த ஒருமணியும் ஒரு யுகமாக மேற்படி ரயிலில் பிரயாணம் செய்தவர்களுக்குத் தோன்றியது.

அவர்கள் எல்லாரிலும் அதிகமாக மனதில் அவசரமும் பரபரப்பும் கொண்டிருந்த சீதாவுக்கோ பாக்கியிருந்த அந்த ஒரு மணியும் ஒரு பிரம்ம யுகமாகத் தோன்றியது. மனிதர்களுக்கு ஒரு யுகம் பிரம்மதேவருக்கு ஒரு பகல் என்று கணக்கு. அப்படியென்றால், பிரம்ம யுகம் எவ்வளவு நீண்டது என்பதை நேயர்கள் கற்பனை செய்து கொள்ளலாம்.

அந்த கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ் ரயிலில் இரண்டாம் வகுப்பு வண்டி ஒன்றில் சீதா பிரயாணம் செய்தாள். சீதாவின் மாமியார் காமாட்சி அம்மாளும் அதே வண்டியில் பக்கத்தில் இருந்தாள்.

காமாட்சி அம்மாளின் மடியைச் சிம்மாதனமாகக் கொண்டு வீற்றிருந்த இன்னொரு ஸ்ரீமதி யார்? அந்த ஸ்ரீமதியிடம் காமாட்சி அம்மாள் ஏன் அவ்வளவு பயபக்தி கொண்டிருக்கிறாள்? அவள் தன்னுடைய தோளிலும் கன்னத்திலும் பளீர் பளீர் என்று அடிப்பதை எதற்காகப் பொறுத்துக் கொண்டிருக்கிறாள்?

அப்புறம் நடப்பது இன்னும் விசித்திரமாயிருக்கிறது. காமாட்சி அம்மாளின் மடியில் வீற்றிருந்த ஸ்ரீமதியைச் சீதா கோபமாகப் பார்த்துப் பயமுறுத்துவதற்காகத் தன் மூக்கில் விரலை வைத்துக் கொண்டு, "வசந்தி! இதோ பார்? பாட்டியை அடிக்காதே! தெரியுமா!" என்று அதட்டுகிறாள். உடனே சீதாவுக்கும் அந்த ஸ்ரீமதி இரண்டு அடி கொடுக்கிறாள். மாமியார் மருமகள் இருவரும் பலமாகச் சிரிக்கிறார்கள்!

"லயிலு கயவைத் தற! கயவைத் தறக்காத்தா அப்பித்தான் அப்பேன்!" என்று ஸ்ரீமதி வசந்தி மழலைமொழி பேசியதும் நமக்கு ஒரு வாறு விஷயம் புரிகிறது.

ஸ்ரீமதி வஸந்தி தேவி காமாட்சி அம்மாளின் கண்ணுக்குக் கண்ணான செல்லப் பேத்தி. சௌந்தரராகவனும் சீதாவும் பெற்றெடுத்த சீமந்த புத்திரி. இப்போது அவளுடைய பிராயம் இரண்டு வருஷம் ஆறு மாதம்.

கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ் கூடியவரை குறிப்பிட்ட நேரத்துக்குப் போய்க் கொண்டிருந்த பழைய காலத்தில், அதாவது 1938-ம் வருஷத்தில் இந்தக் கதையின் இரண்டாம் பாகம் தொடங்குகிறது என்பதை இந்த இடத்தில் சொல்லி வைக்கிறோம்.

பாட்டியையும் அம்மாவையும் வஸந்தி மாற்றி மாற்றி அடித்ததற்குக் காரணம் என்னவென்பதை நேயர்கள் அவளுடைய மழலைப் பேச்சிலிருந்து ஊகித்திருப்பார்கள். ரயில் ஜன்னல் வழியாகக் குழந்தை வெளியே எட்டிப் பார்க்கிறாள் என்பதற்காகக் காமாட்சி அம்மாள் ஜன்னல் கதவை மூடியிருந்தாள். மூடிய கதவைத் திறக்க வேண்டும் என்பது வஸந்தியின் கட்சி. இரண்டு பக்கமும் ஜன்னல் வழியாகப் பார்க்க முடியாவிட்டால் ரயில் பிரயாணம் செய்வதின் உபயோகந்தான் என்ன என்பது வஸந்தியின் கேள்வி. இதற்குத் தக்க பதில் சொல்ல முடியாத காரணத்தினால் காமாட்சி அம்மாள் சீக்கிரத்திலேயே ஜன்னல் கதவைத் திறக்கும்படி நேர்ந்தது.

கதவைத் திறந்ததும் வஸந்தி தன் சின்னஞ் சிறு கையின் பட்டுப்போல் மிருதுவான ஆட்காட்டி விரலை வெளியிலே சுட்டிக்காட்டி, "அம்மா! அது என்ன? பாத்தி! அது என்ன?" என்று கேட்டாள்.

"அது ஒரு பழைய காலத்துக் கோட்டை!" என்றாள் சீதா.

"கோத்தைன்னா என்ன?" என்று வஸந்தி கேட்டாள்.

"கோட்டைன்னா கோட்டைதான்! உனக்குப் பதில் சொல்ல என்னால் முடியாது. சூரியா மாமாதான் வரவேணும்" என்றாள் சீதா.

"சூரியா மாமாவைக் கூப்பிது, அம்மா!" என்றாள் வஸந்தி.

"இப்போது கூப்பிட்டால் அவருக்குக் காது கேட்காது. ரயில் நின்ற அப்புறம் வருவார். கொஞ்ச நேரம் சும்மா இரு!" என்றாள் சீதா.

"லயிலு நின்னப்பதம் எதுக்கம்மா வதணும்? லயிலு ஓதறபோதே மாமா வந்தா என்ன?"

"ரயிலு ஓடறபோதே வந்தால் உன் தலையில் ஒரு குட்டு!" என்று சீதா குழந்தையின் தலையில் ஒரு செல்லக் குட்டுக் குட்டினாள்.



"போ, அம்மா!" என்று சொல்லி விட்டு வஸந்தி மறுபடியும் வெளியே பார்க்க ஆரம்பித்தாள்.

வஸந்தியைப் போலவே வெளியே நோக்கிக் கொண்டிருந்த காமாட்சி அம்மாள், "அதோ ஒரு கோட்டை! அங்கே ஒரு கோட்டை! எங்கே பார்த்தாலும் ஒரே கோட்டையாயிருக்கிறதே? சீதா! இதெல்லாம் யார் கட்டியதோ?" என்றாள்.

"பல ராஜாக்கள் கட்டியதாயிருக்கும், அம்மா! சுமார் ஆயிரம் வருஷம் டில்லிதான் இந்தியாவின் தலைநகரமாயிருந்தது. ஆக்ரா ஸ்டேஷன் தாண்டி வந்தோமே, அதற்கும் டில்லிக்கும் நடுவிலே இப்படித்தான் எங்கே பார்த்தாலும் இடிந்த கோட்டையாயிருக்கும்" என்றாள் சீதா.

"நம்முடைய தென் தேசத்திலே யாத்திரை போனால் இரண்டு பக்கமும் ஒரே கோவிலாயிருக்கும். ஐந்து நிமிஷத்துக்கு ஒரு கோபுரம் தெரியும். சிதம்பரத்திலேயிருந்து திருச்சினாப்பள்ளி போகிற வரைக்கும் ஒரு தடவை நான் கோவில் கோபுரங்களை எண்ணினேன், சீதா! மொத்தம் ஐந்நூறு கோவில் — கோபுரத்துக்கு மேலே எண்ணினேன். இந்தப் பக்கத்திலே கோவில் என்கிற பேச்சே கிடையாது போலிருக்கிறது!"

"இந்த வழியிலே மதுரா - பிருந்தாவனத்திலே மட்டும் கோவில் இருக்கிறது. அம்மா! அதிலும் பிருந்தாவனத்திலே இருக்கிற கோயில் நம்ம பக்கத்திலேயிருந்து வைஷ்ணவாள் வந்து கட்டியதாம். மற்றப்படி இந்த வழியிலே கோயில் கிடையாதுதான். காசிப் பக்கம் போனால் ஏராளமான கோயில் இருக்குமாம்."

"டில்லிப் பட்டணத்திலே கூடக் கோவில் கிடையாதா, சீதா!"

"கிடையாது, அம்மா! அவ்வளவு பெரிய பட்டணத்திலே ஒரு கோவிலைக் கூட நான் பார்க்கவில்லை. ரொம்ப காலமாய் டில்லியிலே துருக்க ராஜ்யந்தான் நடந்தது, அம்மா! அதனாலே

டில்லியில் எங்கே பார்த்தாலும் மசூதிகளாயிருக்கும். மசூதி இல்லாவிட்டால் துருக்க ராஜாவைப் புதைத்த 'டூம்ப்' இருக்கும். நான் பார்த்த வரையிலே டில்லியில் ஒரு கோவில் கூட என் கண்ணுக்குத் தட்டுப்படவில்லை. யாரோ பிர்லா என்கிற பணக்காரச் சீமான் புதிதாகக் கோவில் கட்டுகிறார் என்று சொன்னார்கள்."

"தாஜ்மகால், தாஜ்மகால் என்று ஜபம் பண்ணுகிறாயே? அதுவும் யாரோ ஒரு ராஜாவைப் புதைத்த இடந்தானே?"

உண்மையில் சீதாவின் மனது அப்போது 'தாஜ்மகால்' ஜபம் செய்யவில்லை. ரயில் ஓடும் சமயம் சக்கரங்கள் உருண்டு உருண்டு உருண்டு போகும்போது அந்தச் சத்தத்திலிருந்து ஒருவித சுருதியும் தாளமும் ஏற்படுகின்றன அல்லவா? அந்த சுருதிக்கும் தாளத்துக்கும் இசையச் சீதாவின் மனது "டில்லி ஜங்ஷன்" "சௌந்தர ராகவன்" என்றுதான் ஜபம் செய்து கொண்டிருந்தது.

டில்லி ஜங்ஷன் பிளாட்பாரத்தில் தங்களுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டு தன் கணவன் காத்திருப்பான் என்பது அவளுக்குத் தெரிந்திருந்தது. நீண்ட காலமாகப் பிரிந்திருந்த கணவனைச் சந்திப்பதில் அவளுக்கு இருந்த அவசரத்தினாலேதான் ரயில் வெகு மெதுவாகப் போவதாய் அவளுக்குத் தோன்றியது.

இவ்விதம் மனம் சௌந்தரராகவனிடம் லயித்திருந்தாலும், மாமியாரின் கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டிய கடமையைக் கருதியே பதில் சொல்லி வந்தாள்.

"இல்லை, அம்மா! தாஜ்மகால் ராஜாவைப் புதைத்த இடமல்ல; ராணியைப் புதைத்த இடம். துருக்க ராணிதான். ஷாஜஹான் என்னும் டில்லி பாதுஷாவுக்கு மும்தாஜ்மகால் என்று துருக்க ராணி இருந்தாள். அவளிடம் பாதுஷாவுக்கு ரொம்ப ஆசை. அவள் இறந்த பின் ஷாஜஹான் வேறு கலியாணம் செய்து கொள்ளவில்லை. அவளைப் புதைத்த இடத்தில் தாஜ்மகால் என்னும் அற்புதமான கட்டிடத்தைக் கட்டினான். முழுதும் வெள்ளைப் பளிங்குக் கல்லால் கட்டி அதில் பல வர்ணக் கற்களினால் பூவேலைகள் எல்லாம் செய்வித்தான். உலகத்திலேயே அவ்வளவு அழகான கட்டிடம் வேறு கிடையவே கிடையாதாம், அம்மா!"

"நீ பார்க்கவில்லையா, சீதா!"

"இன்னும் பார்க்கவில்லை. முன்னே நான் இங்கே வந்திருந்தபோது முழுசாக மூன்று மாதம் கூட இருக்கவில்லையே? 'தாஜ்மகாலுக்குப் போகலாம், போகலாம்' என்று உங்கள் பிள்ளை சொல்லிக் கொண்டிருந்தார். அதற்குள் சீமைக்குப் போக உத்தரவு வந்து விட்டது!"

"அதனால் என்ன சீதா! இனிமேல் டில்லியில்தானே இருக்கப் போகிறீர்கள்? எப்போது இஷ்டமோ அப்போது போய்ப் பாருங்களேன்!"

"அதென்ன 'போய்ப் பாருங்களேன்' என்று சொல்கிறீர்கள்? நீங்களுந்தான் எங்களோடு வர வேண்டும். எல்லாருமாய்ப் போய்ப் பார்த்தால் போகிறது!"

"எனக்கு என்னத்துக்கடி அம்மா இதெல்லாம்? ஏதாவது கோவில் குளம் இருந்து போனாலும் பிரயோஜனம் உண்டு. தாஜ்மகாலும் கீஜ்மகாலும் எனக்கு எதற்கு? நான் பார்த்து என்ன ஆகப் போகிறது?"

"அப்படிச் சொல்லாதீர்கள்; போய்ப் பார்த்தால் அப்புறம் அதிசயப்படுவீர்கள். டில்லியில் கூட ஷாஜஹான் கட்டிய அரண்மனை இருக்கிறது. அதில் திவானிகாஸ் என்றும் திவானிஆம் என்றும் இரண்டு இடங்கள் இருக்கின்றன. அவற்றை இன்றைக்கெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம். பதினாயிரம் கண்ணால் பார்த்தாலும் அலுக்காது. ஓரிடத்தில் ஷாஜஹானுடைய அந்தப்புரமாம். அதில் ராணிகள் குளிப்பதற்காகப் பளிங்குக் கல்லாலேயே குளங்களும் வாய்க்கால்களும் அருவிகளும் கட்டியிருக்கிறார்கள். அடாடா! அந்த அற்புதத்தை நேரில் பார்த்தால்தான் அதன் மகிமை தெரியும்."

"அது எவ்வளவு மகிமையாயிருந்தாலும் சரி, எனக்கு வேண்டாம். டில்லியில் கோவில் இல்லாவிட்டால்

இந்தக் கண்மணிதான் (வஸந்தியைக் காட்டி) எனக்குச் சுவாமி, அம்மன், கோவில், குளம் எல்லாம் என்று நினைத்துக் கொள்கிறேன். ஆனால், சீதா! டில்லிப் பட்டணத்தில் எப்போதுமே துருக்க ராஜாக்கள்தான் ஆண்டார்களா? ஹிந்து ராஜாக்கள் எப்போதுமே ஆளவில்லையா?"

"ஆயிரம் வருஷத்துக்கு முன்னால் டில்லியில் ஹிந்து ராஜாக்கள் இருந்தார்களாம். பிரிதிவிராஜன் என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா?"

"பிரிதிவிராஜன் என்ற பெயரைக் கேட்ட மாதிரி இருக்கிறது. அதற்கு மேல் ஒன்றும் ஞாபகம் இல்லை. நீ சொல், சீதா! பொழுது போகட்டும்!"

"டில்லியில் பிரிதிவிராஜன் என்று ஒரு ராஜா இருந்தான். டில்லிக்குப் பக்கத்தில் இன்னொரு ராஜ்யத்தில் ஜயசந்திரன் என்ற ராஜா இருந்தான். ஜயசந்திரனுக்குச் சம்யுக்தை என்ற குமாரி இருந்தாள். ஜயசந்திரனுக்குப் பிரிதிவிராஜன் மீது ஜன்மப் பகை. ஆனால் ஜயசந்திரனுடைய குமாரி சம்யுக்தை பிரிதிவிராஜன் பேரில் காதல் கொண்டு அவனையே கலியாணம் செய்து கொள்ளுவதென்று தீர்மானித்திருந்தாள்........."

"அது எப்படி அவளுக்குப் பிரிதிவிராஜன் பேரில் காதல் உண்டாயிற்று? அவர்கள் எப்போதாவது பார்த்துக் கொண்டதுண்டா?"

"இல்லை, அம்மா! பிரிதிவிராஜனுடைய பராக்கிரமத்தையும் அழகையும் பற்றிச் சம்யுக்தை கேள்விப்பட்டிருந்தாள். நளனைப் பற்றிக் கேள்விப்பட்டுத் தமயந்தி காதல் கொண்டதுபோல் சம்யுக்தையும் பிரிதிவிராஜன் பேரில் காதல் கொண்டாள்."

"நல்ல காதல்! அப்புறம்?"

"அப்புறம் சம்யுக்தையின் கலியாணத்துக்காக ஜயசந்திரன் சுயம்வரம் வைத்தான். அதற்கு ஐம்பத்து நாலு தேசத்து ராஜாக்களையும் அழைத்தான். ஆனால் டில்லி பிரிதிவிராஜனை மட்டும் அழைக்கவில்லை. அழைக்காததோடு பிரிதிவி ராஜனை அவமானப்படுத்துவதற்காக அவனைப்போல் ஒரு சிலை செய்து சுயம்வர மண்டபத்தின் வாசலில் காவல்காரனைப்போல் நிறுத்தி வைத்திருந்தான்!"

"சேச்சே! என்ன கேவலமான காரியம்! அவனுக்கு ஏன் அப்படிப் புத்தி போயிற்று?"

"போதாத காலந்தான். நம்முடைய இந்தியா தேசத்துக்கே போதாத காலம் அப்போது. சம்யுக்தை என்ன செய்தாள் தெரியுமா? கையில் மணமாலையுடனே ஒவ்வொரு ராஜாவாகப் பார்த்துக்கொண்டுவந்தாள். அவர்கள் கழுத்திலே யெல்லாம் மாலையைப் போடவில்லை. மண்டபத்தின் வாசலிலே பிரிதிவிராஜனுடைய சிலை வைத்திருந்ததை அவளுடைய தோழி அவளுக்குச் சொல்லியிருந்தாள். மண்டப வாசலண்டை வந்ததும் சட்டென்று அந்தச் சிலைக்குப் பக்கத்தில் போய்க் கையிலிருந்த சுயம்வர மாலையைச் சிலையின் கழுத்தில் போட்டாள்!......"

"சுத்த அசட்டுப் பெண்ணா யிருக்கிறாளே! சிலையின் கழுத்திலே மாலையைப் போட்டு என்ன பிரயோஜனம்?"

"என்ன பிரயோஜனமா? கேளுங்கள், அம்மா! சிலையின் கழுத்திலே மாலையைப் போட்டதும் அதற்கு அந்த க்ஷணமே உயிர் வந்து விட்டது! சம்யுக்தையைக் கட்டித் தூக்கிக் கொண்டு போய்......"

"இது என்ன பொய்? சிலைக்காவது உயிர் வரவாவது? ஏதோ நிஜமாக நடந்த கதை சொல்கிறாய் என்றல்லவா நினைத்தேன்? விக்கிரமாதித்யன் கதை மாதிரி இட்டுக் கட்டிக் கதை சொல்கிறாயாக்கும்!"

"இல்லை, அம்மா! நிஜமாக நடந்த கதைதான்!"

"நிஜமாக நடந்த கதை என்றால் சிலைக்கு எப்படி உயிர் வந்திருக்கும்?"

"சிலைக்கு உயிர் வந்தது என்றால் உண்மையாகவே சிலைக்கு உயிர் வந்தது என்று அர்த்தமா?"

"பின் என்ன அர்த்தம்?"

"அந்தச் சிலைக்குப் பின்னால் நிஜப் பிரிதிவிராஜன் ஒளிந்து கொண்டிருந்தான். சமயம் பார்த்துச் சம்யுக்தையைக் கொண்டு போவதற்காகவே அவன் வந்து காத்துக் கொண்டிருந்தான். உடனே அவன் சம்யுக்தையைத்

தூக்கிப் பக்கத்திலே தயாரா யிருந்த குதிரையின் மேலே வைத்துக்கொண்டு பறந்தான். நிஜமாகப் பறந்தானா என்று கேட்காதீர்கள். பறக்கிறது மாதிரி வேகமாகக் குதிரையை விட்டுக் கொண்டு போனான். அவனைப் பிடிப்பதற்காக ஜயசந்திரனும் அவனுடைய ஆள்களும் தொடர்ந்தார்கள். ஆனால் முடியவில்லை. பிரிதிவிராஜனுடைய வீரர்கள் குறுக்கிட்டு அவர்களைத் தடுத்து நிறுத்தி விட்டார்கள்......"

"அப்புறம் பிரிதிவிராஜனும் சம்யுக்தையும் கலியாணம் செய்து கொண்டு ரதியையும் மன்மதனையும் போல் சந்தோஷமா யிருந்தார்களாக்கும்!"

"அப்படி இருந்தால்தான் தேவலையே? இல்லவே இல்லை. அந்தக் காலத்தில் கோரி முகம்மது என்ற துருக்க ராஜா வடக்கே யிருந்து படை யெடுத்து வந்தான். டில்லி வரையில் வந்து விட்டான். அவனைப் பிரிதிவிராஜன் நன்றாகத் தோற்கடித்துத் திருப்பி அனுப்பினான். முதலில் இரண்டு மூன்று தடவை இப்படி நடந்தது. அதற்கப்புறம் சம்யுக்தையின் தகப்பன் ஜயசந்திரன் கோரி முகம்மதுவுக்கு ஓலை அனுப்பினான். 'நீ மறுபடியும் படை யெடுத்து வா! உனக்கு நான் உதவி செய்கிறேன்' என்று. கோரி முகம்மது ஜயசந்திரன் இரண்டு பேரும் சேர்ந்து பிரிதிவி ராஜனுடன் யுத்தம் செய்தார்கள். பிரிதிவிராஜன் கடைசி வரையில் சண்டை போட்டு யுத்த களத்தில் செத்து விழுந்தான்."

"ஐயோ! பாவம்! சம்யுக்தையின் கதி என்னவாயிற்றோ?"

"சம்யுக்தை தீயில் குதித்துப் பிராணனை விட்டாள். அது முதல் டில்லியில் துருக்க ராஜ்யம் ஏற்பட்டது. சீக்கிரத்தில் ஜயசந்திரனும் தன்னுடைய ராஜ்யத்தை இழந்து துருக்க ராஜாவுக்கு அடிமையானான்."



"என்ன விபரீதம்? இதற்குத்தான் பெரியவர்கள் சொல்கிறதைக் கேட்டு நடக்க வேண்டும் என்கிறது. சம்யுக்தை தகப்பனார் சொன்னபடி கேட்டிருந்தால் இப்படியெல்லாம் நடந்திராது அல்லவா?"

"அழகா யிருக்கிறதே, நீங்கள் சொல்வது? அது எப்படி சம்யுக்தையின் பேரில் பழி போடுகிறீர்கள்? ஜய சந்திரன் செய்தது என்ன நியாயம்? மகளுடைய சம்மதப்படி அவளைக் கலியாணம் செய்து கொடுத்திருந்தால் என்ன? அதுமட்டுமல்லாமல் சொந்த மாப்பிள்ளையின் பேரில் துவேஷத்தினால் அன்னிய ராஜாவோடு சேர்ந்தானே? அது எவ்வளவு பெரிய

துரோகம்? என்னைக் கேட்டால், கலியாண விஷயத்தில் மட்டும் அப்பா அம்மா தலையிடுவது ரொம்பப் பிசகு என்று சொல்வேன். பெண்ணாயிருந்தாலும் சரி, பிள்ளையாயிருந்தாலும் சரி, அவர்களுக்குப் பிடித்திருப்பவர்களைக் கலியாணம் செய்து கொள்வதற்கு அப்பா அம்மா குறுக்கே நிற்கக் கூடாது. அப்படிக் குறுக்கே நிற்பவர்களைச் சுண்ணாம்புக் காளவாயில் போட்டு விட வேண்டும்!"

இந்த வார்த்தைகள் காமாட்சி அம்மாளுக்கு ஒரு பழைய ஞாபகத்தை உண்டாக்கின. அவளுடைய முகம் சுருங்கியது. இதைப் பார்த்த சீதா, "அம்மா! உங்களுக்குத் தலை வலிக்கிறதா, என்ன?" என்று கேட்டாள்.

"இல்லை!" என்று சொன்னாள் காமாட்சி அம்மாள். பிறகு "நீ சொல்கிறது அவ்வளவு சரியில்லை, சீதா! தாயார் தகப்பனார் சொல்கிறது எப்போதும் தப்பாயிராது! குழந்தைகளின் நன்மைக்காகத்தான் சொல்லுவார்கள். குழந்தைகள் சௌக்கியமாகவும் சந்தோஷமாகவும் இருக்க வேண்டும் என்றுதானே தாயார் தகப்பனாருக்கு இருக்கும்? எல்லாரும் ஜயசந்திரனைப் போல் இருக்க மாட்டார்கள். குழந்தைகள் சௌக்கியமாயிருக்க வேண்டும் என்றுதான் யோசனை செய்து சொல்வார்கள்!" என்றாள்.

"வாஸ்தவந்தான், அம்மா! எல்லாரும் ஜயசந்திரனைப் போல் இருப்பார்களா? இப்போது என்னுடைய கலியாணத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். உங்கள் பிள்ளையின் இஷ்டம் போல் நீங்கள் விட்டதனால் தானே நடந்தது? இல்லாவிட்டால் நடந்திருக்குமா?" என்றாள் சீதா.

மறுபடியும் காமாட்சியம்மாளின் மனதில் சுருக்கென்று தைத்தது. எனவே அவள் பேச்சை மாற்ற விரும்பினாள்.

"சூரியாவுக்கு இன்னும் கலியாணம் ஆகவில்லையே, சீதா! ஏன் ஆகவில்லை என்று உனக்கு ஏதாவது தெரியுமா? குற்றங் குறை ஏதேனும் உண்டோ?" என்று கேட்டாள்.

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. சூரியாவுக்கு அப்படியொன்றும் வயதாகிவிடவில்லையே? இருபது அல்லது இருபத்தொன்றுதானிருக்கும். ஆனால் அவனிடம் கலியாணத்தைப் பற்றிப் பேச்சுக் கொடுக்கிறவர்களிடம் 'நான் கலியாணமே பண்ணிக் கொள்ளப் போவதில்லை' என்று சொல்லிக் கொண்டிருக்கிறான்."

"பசங்கள் எல்லாருமே கொஞ்ச காலம் அப்படித்தான் வேண்டாம் என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள். கிட்டிமுட்டி வரும்போது சரி



என்று சொல்லி விடுவார்கள். சூரியா எதுவரையில் படித்திருக்கிறான்?"

"பி. ஏ. படித்துக் கொண்டிருந்தான்; இப்போது விட்டுவிட்டான்."

"ஏன் விட்டு விட்டான்? படிப்பு வரவில்லையோ? சூரியாவைப் பார்த்தால் ஒருமாதிரி அசடு போலத்தான் தோன்றுகிறது."

"பார்ப்பதற்குச் சூரியா அப்படித்தான் இருப்பான். ஆனால் உண்மையில் அசடு இல்லை, அம்மா! ரொம்ப கெட்டிக்காரன். என் கலியாணம் நடந்ததே அவனால்தான் என்று சொல்ல வேண்டும். உங்கள் பிள்ளை லலிதாவைப் பிடிக்கவில்லை, என்னைத்தான் பிடித்திருக்கிறது என்று சொன்னதும் என் மாமாவும் மாமியும் ரௌத்ராகாரம் அடைந்து விட்டார்கள். அவர்களைச் சூரியாதான் சமாதானப்படுத்தினான்."

"உன் மாமாவும் மாமியும் கோபித்துக் கொண்டால் கலியாணம் நின்று போய்விடுமா? கடவுள் யாருக்கு யார் என்று முடிபோட்டிருக்கிறாரோ அந்த மாதிரிதான் நடக்கும். அது இருக்கட்டும், சீதா! சூரியா ஏன் படிப்பை விட்டு விட்டான்?"

"அவனுக்கு என்னமோ இங்கிலீஷ் படிப்புப் பிடிக்கவில்லையாம்! பி. ஏ. பாஸ் செய்து விட்டால் அப்பாவும் அம்மாவும் ஏதாவது உத்தியோகம் பார்க்கும்படி வற்புறுத்துவார்களாம். யாராவது பெண்ணைக் கொடுக்கிறேன் என்று வந்து அவனைத் தொந்தரவு செய்வார்களாம்......"

"பெண்ணைக் கொடுக்கிறேன் என்று வந்தால் அது ஒரு தொந்தரவா? நான் கூட என் தம்பி பெண்ணுக்குப் பார்க்கச் சொல்லலாம் என்றுதான் இவ்வளவு தூரம் சூரியாவைப் பற்றிக் கேட்கிறேன். படிப்பை விட்டுவிட்டு உத்தியோகம் பார்க்காமல் வேறு என்ன செய்யப் போகிறானாம்?"

"இந்தப் பக்கத்தில் எங்கேயோ காங்கிரஸ் நடக்கிறதாம். அதற்காக வருகிறானாம். ஆனால் திரும்பி ஊருக்குப் போகப் போவதில்லையாம். டில்லியிலேயே தங்கி விருந்து பத்திரிகைகளுக்கு எழுதலாம் என்று எண்ணிக் கொண்டிருக்கிறானாம்."

"ஓகோ! பத்திரிகைக்கு எழுதுவானா என்ன? அவ்வளவு கெட்டிக்காரனா? அப்படியென்றால் தேவலையே? சீதா! ராகவன் பத்திரிகைக்கு எழுதியதால் தான் அவனுக்குப் பெரிய உத்தியோகம் கிடைத்தது என்று உனக்குத் தெரியுமோ, இல்லையோ?"

"உங்கள் பிள்ளையையும் இவனையும் ஒன்றாகச் சொல்லாதேயுங்கள். அவரைப்போல் இவனுக்குப் படிப்பு உண்டா? அவ்வளவு சாமர்த்தியந்தான் உண்டா? ஏதாவது காமா சோமா என்று தமிழ்ப் பத்திரிகைகளுக்கு எழுதுவான் போலிருக்கிறது. 'டில்லியில் இன்றைக்குக் காற்று அடித்தது; வெள்ளைக் காக்காய் பறந்தது!' என்று இந்த மாதிரி ஏதாவது எழுதுவான் போலிருக்கிறது!"

இந்தச் சமயத்தில் ரயில் 'வீல்' என்று சத்தமிட்டுக் கொண்டு கொஞ்சம் மெதுவாயிற்று. தூரத்தில் அநேக ஜனங்கள் ஏககாலத்தில் இரைச்சல் போடும் சத்தமும் வேறு பல ஓசைகளும் கேட்டன. சீதா ரயிலுக்கு வெளியில் எட்டிப் பார்த்தாள்.

"அம்மா! அம்மா! டில்லி ஸ்டேஷன் அதோ தெரிகிறது. உங்கள் பிள்ளை ஸ்டேஷனுக்கு வந்திருப்பார் இல்லையா?"

"வந்திருக்கிறானோ அல்லது ஆபீஸில் அதிக வேலை என்று வேறு யாரை யாவது அனுப்பி வைக்கிறானோ?"

"அதெல்லாம் இல்லை, அம்மா! அவர் கட்டாயம் ஸ்டேஷனுக்கு வந்திருப்பார்!" என்றாள் சீதா.

"உனக்குத்தான் தெரியுமே? பின்னே, என்னை எதற்காக அதைப் பற்றிக் கேட்கிறாய்?"

இந்தச் சம்பாஷணையின் ஆரம்பத்திலேயே வஸந்தி தூங்கிப் போய் விட்டாள். குழந்தையைச் சீதா தட்டி எழுப்பி, "வசந்தி! வசந்தி! டில்லி வந்துவிட்டது. அப்பா பிளாட் பாரத்தில் வந்திருப்பார்! எழுந்திரு! எழுந்திரு!" என்றாள்.

காது செவிடுபடும்படியான பல வகை இயந்திரச் சத்தங்களுக்கும் மனிதரின் கூக்குரல்களுக்கும் மத்தியில் கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ் டில்லி ஸ்டேஷனுக்குள் பிரவேசித்தது.

## பவனி

சென்னை மாநகரின் பிரதான சாலைகளில் இந்தியாவின் பிரதம மந்திரி பவனி வந்த போது சென்னை வாசிகள் அமோகமான வரவேற்பு அளித்து ஆரவாரித்தார்கள்.

★ ★

## மாபெரும் கூட்டம்

•

ஐந்து லட்சம் முதல் பத்து லட்சம் வரை மதிப்பிடப்பட்ட மாபெரும் கூட்டத்தில் ஜவாஹர்லால்ஜி தம் உள்ளத்தில் பொங்கிய உணர்ச்சிகளை வெள்ளமாகப் பொழிந்தார்!

★ ★



## பரிசு



சென்னைச் சட்டசபை மண்டபத்தில் ராஜாஜி படத்திறப்பு விழாவின் போது பிரார்த்தனை கீதம் பாடிய ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மிக்கும் அவருடைய குமாரி ராதாவுக்கும் மலர் மாலைப் பரிசளித்தார்.



அன்றிரவு ரஸிக மணி டி. கே. சி. யின் அருகில் அமர்ந்து இன்னிசை கேட்டார்.



★ ★

## சகோதரிகள்

●

மியூஸியம் தியேட்டரில் நடந்த பெண் மணிகளின் பெருங் கூட்டத்துக்கு அடக்க ஒடுக்கத்துடன் தலை குனிந்து சென்றார்; அரிய சொற்பொழிவு நிகழ்த்தினர்.

★ ★







# ஏ. எஸ். ஐயங்கார்




இங்கிலாந்திலிருந்து ஆதிகாலத்தில் ஆஸ்திரேலியாவுக்கு அனுப்பப்பட்டவர்கள் திருடர்கள், முரடர்கள், தலைப்பாமாற்றிகள், ஆயுள் கைதிகள் முதலியோர் என்பது சரித்திரம் படித்தவர்கள் அறிந்த விஷயம். அப்பேர்ப்பட்ட வம்ச பரம்பரையில் வந்த காட்டன் என்பவன் கதைகளில் புகழ் பெற்ற கால் திருடன், அரைத் திருடன், முக்கால் திருடன், பக்காத் திருடன் ஆகியவர்களைத் தோற்கடித்து 'ஆகாசத் திருடன்' என்று பெயர் வாங்கிக் கொண்டு இங்கிலாந்துக்குத் திரும்பினான். இந்தச் செய்தியைச் சென்ற வாரத்துப் பத்திரிகைகளில் படித்தபோது புது டில்லியில் ஸ்ரீ ஏ. எஸ். அய்யங்கார் காரியாலயத்தில் நடைபெற்ற ஒரு சிறு சம்பவம் என் ஞாபகத்துக்கு வந்தது.

முதலில் ஸ்ரீ ஏ. எஸ். ஐயங்கார் யார் என்பது பற்றி நேயர்களில் ஏற்கனவே தெரிந்திராதவர்களுக்குத் தெரியப்படுத்த விரும்புகிறேன்.

இந்திய சுதந்திர சர்க்காரின் விளம்பர இலாகாத் தலைவர் (பிரின்ஸிபல் இன்பர்மேஷன் ஆபீஸர்) என்னும் மிகப் பொறுப்பு வாய்ந்த பதவியை ஸ்ரீ ஏ. எஸ். ஐயங்கார் தற்சமயம் வகித்து வருகிறார்.

ஸ்ரீ ஏ. எஸ். ஐயங்காரை ஒரு முறை பார்த்தவர்கள் அவருடைய கரிய திருமேனியையும் வெள்ளைத் தலைப்பாகையையும் ஒரு நாளும் மறக்கமுடியாது. ('கரிய திருமேனி' என்பது கண்ணபிரானைப் பற்றிப் பெரியாழ்வார் அருளிய அருமையான சொற்றொடர். ஆகையால் ஏ. எஸ். ஐயங்கார் விஷயத்தில் அதை உபயோகிப்பதில் தவறு ஒன்றுமில்லை.) காலஞ்சென்ற ஸ்ரீர் சத்தியமூர்த்தி முதன் முதலில் பிரசங்கமாரி பொழியத் தொடங்கிய காலத்தில் வெள்ளைக்காரர்களுடைய பட்சபாதத்தைப் பற்றி வெளுத்து வாங்குவார். அதற்கு உபகாரணமாக, "அவன் தோல் வெளுப்பாம்; என் தோல் கறுப்பாம்!" என்ற அடுக்குச் சொற்றொடரை அமோகமாகக் கையாளுவார். வெள்ளைக்காரர்களுக்கு வெகு காலம் வரையில் "கறுப்பு நிறத்தவர்களால் காரியம் ஒன்றும் திறமையாகச் செய்ய முடியாது" என்ற குருட்டு எண்ணம் இருந்து வந்தது உண்மையேயாகும். வெள்ளைக்காரனுடைய மனத்திலிருந்து அந்தத் தப்பு எண்ணத்தை அடியோடு போக்கியவர் நம்முடைய ஏ. எஸ். ஐயங்கார்தான் என்று டில்லியில் சிலர் சொன்னார்கள். ஸ்ரீ ஏ. எஸ். ஐயங்காரின் மேனி நிறத்தையும் அவருடைய வேலைத் திறத்தையும் பார்த்த பிறகு வெள்ளைக்காரன் கறுப்பு நிறத்தைப் பற்றிய தன்னுடைய கருத்தை மாற்றிக் கொண்டு இந்தியருக்குச் சுதந்திரத்தைக் கொடுக்கத் தீர்மானித்து விட்டானாம்! — இது எப்படியானாலும் சரி. ஏற்கனவே பிரிட்டிஷ் சர்க்காரின் யதேச்சாதிகார ஆட்சியிலும் ஸ்ரீ ஏ. எஸ். ஐயங்கார் இதே உத்தியோகத்தை மிகத் திறமையாகப் பார்த்து வந்தார். அதைக் காட்டிலும் அதிகத் திறமையுடன் இந்திய சுதந்திர சர்க்காரின் ஊழியம் நடத்தி வருகிறார். வெள்ளைக்காரனே மெச்சிய திறமைசாலியான ஒருவரை நம்முடைய சுதந்திர சர்க்கார் இலேசில் இழந்து விடுவார்களா, என்ன?

இந்தச் சந்தர்ப்பத்தில் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு அவர்கள் சென்னை நகர சபை உபசாரத்துக்குப் பதிலளிக்கையில் கூறிய ஒரு விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். "புது டில்லியில் சர்க்கார் நிர்வாக உத்தியோகங்களில் தென்னிந்தியர்கள் பலர் இருக்கிறார்கள்; அவர்கள் திறமையாக வேலைபார்க்கிறார்கள்" என்று நேருஜி மனமுவந்து கூறினார். இந்த மகிழ்ச்சிகரமான நிலைமையை நானும் நேரில் தெரிந்துகொள்ள நேர்ந்தது. புது டில்லியில் இருந்து சுதந்திர சர்க்காரை நடத்துகிறவர்கள் பெரும்பாலும் நம்மவர்கள்தான் என்று சொல்வது மிகையாகாது.

புது கவர்னர்-ஜெனரல் பொறுப்பு ஏற்பதற்கு முதல் நாளிரவு பழைய கவர்னர்—ஜெனரல் மவுண்ட் பாட்டன் அரசாங்க மாளிகைத் தோட்டத்தில் ஒரு பெரிய 'பார்ட்டி' கொடுத்தார். இந்தப் பார்ட்டிக்குச் சுமார் ஆறாயிரம், ஏழாயிரம் பேர் வந்திருந்தார்கள். இவர்களில் பாதிப் பேருக்கு

மேல் இந்திய சர்க்காரில் பெரிய பெரிய உத்தியோகம் வகிப்பவர்களும், அவர்களுடைய குடும்பத்தாரும் என்று அறிந்தேன். என்னுடன் பார்ட்டிக்கு வந்திருந்த நண்பரிடம் "இவர்களில் சிலபேரை இன்னின்னார் என்று சொல்லுங்களேன்!" என்று கேட்டேன். அந்த நண்பர் சொன்னார்:— "இந்தப் பெரிய கூட்டத்தில் யாராவது ஒரு கல்லைத் தூக்கிப் போட்டால் அது ஒரு ஸெக்ரடரியின் தலையிலோ, டிபுடி ஸெக்ரடரியின் தலையிலோ, அண்டர் ஸெக்ரடரியின் தலையிலோ, அப்பர் ஸெக்ரடரியின் தலையிலோதான் விழுந்து தீரவேண்டும். இடறி யார் மேலாவது தீர விழுந்தால், அவர் அநேகமாக ஒரு இரண்டாயிரம் ரூபாய் சம்பளக்காரராக இருப்பார்; மூவாயிரம், நாலாயிரம் ரூபாய் சம்பளக்காரராயும் இருக்கலாம். யார் மேலாவது தீர தவறி முட்டிக் கொண்டால் அவர் ஒரு அம்பாஸடராகவோ உப அம்பாஸடராகவோ இருக்கக் கூடும். அதோ வருகிறார் பார்த்தீர்களா? அவர்தான் ஸ்ரீ வி. கே. மேனன். இவர் முன்னால் போவது ஆபத்து. போனால் நம்மைப் பிடித்து உடனே ஒரு ராஜப் பிரமுகராகவோ, உப ராஜப்பிரமுகராகவோ, ராஜ சேவா துரந்தரராகவோ ஆக்கினாலும் ஆக்கிவிடுவார்! சமஸ்தான இலாகாவின் ஸெக்ரடரி இவர்! பல சமஸ்தானங்களை ஒன்று சேர்ப்பதிலும் ராஜப்பிரமுகர், உப ராஜப்பிரமுகர் முதலியவர்களை நியமிப்பதிலும் கைதேர்ந்தவர். மெதுவாக இவரைப் பார்க்காதது போல் நழுவி விடுவோம். இதோ வருகிறாரே இவர் கே. பி. மேனன்; அதோ அவர் வி. பி. எஸ். மேனன்; இங்கே உல்லாசமாக நடந்து வருகிறவர் கே. பி. என். மேனன்; அந்த மூலையில் கையில் தடியுடன் வருகிறவர் டி. கே. என். மேனன்; இந்தப் பக்கத்திலே தலை வழுக்கையாக வருகிறவர் எச். எம். கே. மேனன்......"



ஏ. என். ஐயங்கார் "ஓ! எஸ்!" என்றார்.

"ஸார்! கொஞ்சம் நிறுத்துங்கள்; மேனன்களைத் தவிர வேறு யாராவது இங்கே உண்டா?" என்று கேட்டேன்.

"இல்லாமல் என்ன? அதோ 'டிப்டாப்'பாக உடை உடுத்திக் கொண்டு வருகிறவர் கே. எஸ். ஐயங்கார்; இந்த மூலையில் சாதுவைப் போல் நிற்கிறவர் எச். பி. ஐயங்கார்; அவர் எப். ஜீ. ஐயங்கார்......"

"நிறுத்துங்கள்; நிறுத்துங்கள். மேனன்களையும் ஐயங்கார்களையும் தவிர வேறு யாரேனும் இங்கே உண்டா?" என்று கேட்டேன்.

"உண்டு; உண்டு. ஏ. எஸ். கிருஷ்ணசாமி, பி. எஸ். கிருஷ்ணசாமி, டி. பி. ராமசாமி, ஓ. பி. நாராயணசாமி, எம். டி. வைத்தியநாதன், கே. டி. சுந்தரம்—இப்படி எத்தனையோ பேர் இருக்கத்தான் இருக்கிறார்கள்! இனவாரியாகச் சொல்வதாயிருந்தால், அய்யர்கள், முதலியார்கள், செட்டியார்கள், பிள்ளைகள் ஆகிய எல்லா வகுப்பாரும் இருக்கிறார்கள்......"

"சரி, சரி! வன்னிகுல க்ஷத்திரியர் யாரேனும் இருக்கிறாரா?" என்றேன்.

"இல்லை!" என்று அந்த நண்பர் கையை விரித்ததும் எனக்கு ஒரே விசாரமாய்ப் போய்விட்டது.

வன்னிகுல க்ஷத்திரியர்களுக்குப் புது தில்லியில் எப்படிப் பிரதிநிதித்வம் இல்லாமல் இருக்கலாம்? நமது நண்பர் சேலம் சுப்பிரமணியம் எம். எல். ஏ. இதைக் குறித்துச் சென்னைச் சட்ட சபையில் இருபது கேள்விகளும் மூன்று உப கேள்விகளும் கேட்பார் என்று எதிர்பார்க்கிறேன்.

வன்னிகுல க்ஷத்திரியர்களுக்கும் அவர்களுடைய பிரதிநிதிகளுக்கும் ஒரு வேண்டுகோள். சட்புட் என்று அவர்கள் ஹிந்தி பாஷையைக் கற்றுக் கொள்ளட்டும். கற்றுக் கொண்டால் அடுத்த பத்து வருஷத்தில் புது தில்லியை வன்னிகுல க்ஷத்திரிய மயமாக்கி விடலாம். 'ஹிந்தி

எதிர்ப்புக்காரர்கள்' வாயில் விரலை வைத்துக்கொண்டு நிற்கட்டும்.

இரண்டு நாளைக்கு முன்பு ஒரு நண்பர் இவ்விதம் சொன்னார்:

"இங்கிலீஷ் படித்துவிட்டு அடிமையாயிருப்பதற்கு யாரும் ஆட்சேபிக்கவில்லை; ஆனால் ஹிந்தி படித்துவிட்டு இந்தியாவை ஆளுவதற்கு ஆட்சேபிக்கிறார்களே? இதை என்னவென்று சொல்வது?"

என்னவென்று சொல்வது? பருத்தியின் விசேஷம் என்றுதான் சொல்ல வேண்டும். இந்தியாவை அடிமைப் படுத்திய இங்கிலீஷ் இன்னமும் நம் பள்ளிக்கூடங்களில் கட்டாய பாடமாக இருக்கிறது! அதைப் பற்றி ஒருவரும் கிளர்ச்சி செய்யவில்லை. ஹிந்தி படித்து இந்தியாவை ஆளுவதற்கு ஆட்சேபிக்கிறார்கள்!

எங்கேயோ ஆரம்பித்து எங்கேயோ போய்விட்டேன். பாதகமில்லை; விட்ட இடத்துக்குத் திரும்பி வந்துவிடலாம். புது தில்லியில் தென்னிந்தியர்கள ரொம்பப் பேர் பொறுப்பு வாய்ந்த உத்தியோகங்களில் இருக்கிறார்கள் என்பதையும், அந்த உத்தியோகங்களைத் திறம்பட வகிக்கிறார்கள் என்பதையும் சொல்ல வந்தேன். நமது மாபெருந் தலைவர்களான பண்டித நேரு முதலியவர்களிடத்தில் வடக்கத்தியான், தெற்கத்தியான் என்கிற குறுகிய வேற்றுமை உணர்ச்சி லவலேசமும் கிடையாது. கீழே உள்ளவர்கள் சிலரிடம் அத்தகைய அற்ப நோக்கம் இருந்தால் அதை நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை.

* * *

புது தில்லியில் பொறுப்பான வேலையைத் திறமையாகச் செய்து வருகிறவர்களில் ஒருவர் ஸ்ரீ ஏ. என். ஐயங்கார். அவருடைய காரியாலயத்துக்கு நான் போக வேண்டி நேரிட்டது. புது கவர்னர்-ஜெனரல் வரவேற்பு வைபவங்களைப் பார்ப்பதற்கு ஸ்ரீ ஏ. என். ஐயங்காரிடம் 'பாஸ்' பெற்றுக் கொள்வதற்காகப் போயிருந்தேன்.

அதே சமயத்தில் என்னைப் போலவே மேற்படி நிகழ்ச்சிகளைக் கவனிக்கப் 'பாஸ்' வாங்குவதற்காக ஒரு வெள்ளைக்காரரும் வந்திருந்தார். அவருக்கும் ஸ்ரீ ஏ. என். ஐயங்காருக்கும் நடந்த சம்பாஷணையை ஞாபகம் இருக்கிறவரையில் கீழே தந்திருக்கிறேன்.

ஐரோப்பியர்:—மிஸ்டர் ஐயங்கார்! என்னுடைய மனு வந்து சேர்ந்ததா?

அய்யங்கார்:—ஓ! எஸ்! வந்து சேர்ந்தது. அதைப்பற்றி என்ன?

ஐ:—அதைப் பற்றி ஒன்றுமில்லை. பாஸ் வாங்கிக் கொண்டு போகலாம் என்று வந்தேன். கொடுக்கிறீர்களா?

அ:—ஓ! எஸ்! பேஷாகக் கொடுக்கிறேன். கொடுக்க மாட்டேன் என்று சொல்லுவேனா? தங்களுக்கு எதற்குப் பாஸ் வேண்டும்?

ஐ:—பழைய கவர்னர் ஜெனரல் போவது, புது கவர்னர் ஜெனரல் வருவது, இது சம்பந்தமான எல்லா நிகழ்ச்சிகளையும் பார்க்க வேண்டும். அதற்குத்தான் பாஸ் வேண்டும். கொடுக்கிறீர்களா?

அ:—ஓ! கட்டாயம் கொடுக்கிறேன். ஆனால் தாங்கள் இதற்கெல்லாம் ஏன் போக விரும்புகிறீர்கள்? அதாவது, எந்த ஹோதாவில் தங்களுக்கு நான் 'பாஸ்' தருவது என்று கேட்கிறேன்.

ஐ:—பத்திரிகை நிருபர் என்ற ஹோதாவிலேதான் மனுவிலேகூட அவ்விதமாக எழுதியிருக்கிறேனே!

அ:—ஓ! எஸ்! ஞாபகம் வருகிறது. தாங்கள் எந்தப் பத்திரிகைக்கு நிருபர்?

ஐ:—ஸ்விட்ஸர்லந்து நாட்டுப் பத்திரிகைக்கு நிருபர். அந்தப் பத்திரிகைக் 'கட்டிங்'கூட அனுப்பியிருக்கிறேனே!

அ:—ஓ! எஸ்! அனுப்பியிருக்கிறீர்கள். ஆனால் ஸ்விஸ் பாஷை எனக்குத் தெரியாது. ஆகையால் அதில் என்ன எழுதியிருந்தது என்றும் தெரியவில்லை. மேற்படி ஸ்விட்ஸர்லந்து பத்திரிகைக்குத் தாங்கள் நிரந்தர நிருபரா?

ஐ:—இல்லை, இல்லை. எப்போதாவது எழுதுவேன்.

அ:—ஓஹோ! எப்போதாவது எதாவது எழுதுவீர்களோ? எப்போதாவது எதாவது எழுதுவதற்காகவா தில்லியில் வந்து இருக்கிறீர்கள்?

ஐ:—இல்லை. இல்லை! இங்கே ஒரு வியாபாரக் கம்பெனியில் நான் உத்தியோகம் பார்க்கிறேன். அதோடு மேற்படி பத்திரிகைக்கும் எழுதுகிறேன்.

அ:—ஓஹோ! அப்படியானால் உங்களை அசல் பத்திரிகை நிருபர் என்பதாகச் சொல்ல முடியாது அல்லவா?

ஐ:—ஆமாம்; 'அசல் பத்திரிகை நிருபன்' என்று என்னைச் சொல்ல முடியாது தான். ஆகவே எனக்குப் 'பாஸ்' கொடுக்க மாட்டீர்களோ?

அ:—அடடா! கொடுக்க மாட்டேன் என்று நான் சொன்னேனா? கட்டாயம்

கொடுக்கிறேன். ஆனால் எப்படிக் கொடுக்கிறது என்றுதான் புரியவில்லை. தாங்கள் அதற்குத் தக்க யோசனை சொல்லி உதவி செய்யவேண்டும்.

ஐ:—நானா? நான் என்ன யோசனை உங்களுக்குச் சொல்ல முடியும்?

அ:—என் முடியாது? நீங்கள் தான் யோசனை சொல்ல வேணும். நிலைமை இதுதான். இங்கே ஒரு வியாபாரக் கம்பெனியில் நீங்கள் உத்தியோகம் பார்க்கிறீர்கள். ஆகையால் அசல் பத்திரிகை நிருபர் இல்லை. எப்போதாவது பத்திரிகைக்கு எழுதுகிறீர்கள். ஸ்விட்ஸர்லந்து பத்திரிகைக்கு. ஸ்விஸ் பாஷை எனக்குத் தெரியாது. ஆகையால் எப்போது எதைப் பற்றி என்ன எழுதியிருக்கிறீர்கள், எழுதியிருப்பது நீங்கள்தானா என்று நான் கண்டுபிடிக்க முடியாது. ஸ்விட்ஸர்லந்து கவர்ன்மெண்டாரிடமிருந்து ஏதாவது கடிதம் கொண்டு வந்திருக்கிறீர்களா?

ஐ:—இல்லை; நான் ஸ்விட்ஸர்லந்துக்காரனேயில்லை; இங்கிலீஷ்காரன்.

அ:—பாருங்கள்; பாருங்கள்! நீங்களே பாருங்கள்! நான் எந்த விதத்தில் உங்களுக்குப் பாஸ் கொடுக்கிறது? எப்படியாவது கொடுக்கவேண்டும் என்றுதான் பார்க்கிறேன். ஆனால் நீங்களோ அசல் பத்திரிகை நிருபர் அல்ல......

ஐ:—மிஸ்டர் ஐயங்கார்! உங்களுடைய கஷ்டத்தை நான் உணருகிறேன். நான் பாஸ் கேட்டது சரியில்லைதான்.

அ:—எனக்குக் கஷ்டம் ஒன்றுமில்லை. ஆனால் ரொம்ப வருத்தமாயிருக்கிறது. உங்களுக்கு எப்படியாவது 'பாஸ்' கொடுத்துவிட வேண்டும் என்று பார்க்கிறேன். அதற்கு வழி தெரியவில்லையே என்றுதான் வருத்தமாயிருக்கிறது.

ஐ:—ஐயங்கார்! நீங்கள் வருத்தப்பட வேண்டாம்! எனக்குப் பாஸ் வேண்டியதில்லை. என் மனுவை வாபஸ் வாங்கிக் கொண்டு விடுகிறேன்.

அ:—அப்படித் தாங்கள் சொல்லக் கூடாது. 'பாஸ்' வாங்கிக் கொண்டுதான் போக வேண்டும். ஆனால் எனக்கு என்ன வருத்தமாயிருக்கிறதென்றால்......

ஐ:—இல்லை, இல்லை. எனக்குப் பாஸ் வேண்டவே வேண்டாம். தாங்கள் எனக்காக வருத்தப்படாமலிருந்தால் அதுவே போதும். போய் வருகிறேன், மிஸ்டர் அய்யங்கார்! தாங்க்ஸ்! குட் பை!

இவ்விதம் ஸ்ரீ ஏ. எஸ். ஐயங்காரிடம் கட்டாயமாக விடை பெற்றுக்கொண்டு அந்த வெள்ளைக்காரர் கம்பி நீட்டினர்.

பிறகு ஸ்ரீ ஏ. எஸ். ஐயங்கார் என்னைப் பார்த்து "என்னுடைய நிலைமை எவ்வளவு கஷ்டமானது பார்த்தீர்களா? யாராவது ஒற்றன், உளவாளியாயிருந்தாலும் இருப்பான். அவனுக்கு எப்படி 'பாஸ்' கொடுப்பது? ஒரு வேளை உண்மையான மனுஷனாயிருந்தாலும் இருக்கலாம். அப்படிப் பட்டவனை மரியாதையாக நடத்தாவிட்டால் நம்முடைய சுதந்திர சர்க்காரைப் பற்றிக் கேவலமாக நினைத்துக் கொண்டு போவான்!" என்று கூறினர்.

அந்தத் தர்ம சங்கடமான நிலைமையை அவர் சமாளித்த விதத்தைப் பற்றி நான் பாராட்டினேன். "அந்த வெள்ளைக்காரன் உங்களுக்குக் கொடுத்த வருத்தத்தை நினைத்துப் பல நாள் தூங்க மாட்டான்!" என்றேன்.

"அதெல்லாம் வெறும் பாசாங்காயிருந்தாலும் இருக்கும்!" என்றார்.

"நீங்கள் அவனுக்காகப் பட்ட வருத்தமும் ஒரு வேளை......"

"ஆமாம்; ஆமாம்! என்ன செய்கிறது? சில சமயம் வேஷம் போடத்தான் வேண்டியிருக்கிறது!" என்றார் ஐயங்கார்.

அந்த வெள்ளைக்காரனுக்குப் போட்ட நாமத்தையே ஐயங்கார் அவர்கள் எனக்கும் போட்டு விடுவாரோ என்று கொஞ்சம் பயமிருந்தது. அப்படியெல்லாம் ஆகவில்லை. தயாராக வைத்திருந்த பாஸை எடுத்துக் கொடுத்து விட்டார்.

* * *

புது தில்லியில் பத்திரிகைக்காரர்களின் கௌரவம் உச்சத்தில் இருக்கிறது என்பதை இச்சமயத்தில் தெரிவித்துக் கொள்கிறேன். வேறு யாரும் போக முடியாத இடங்களுக்கெல்லாம் பத்திரிகையாளர் போகலாம். திறவாத கதவெல்லாம் பத்திரிகையாளருக்குத் திறந்துவிடும். அதாவது உண்மையான பத்திரிகையாளராயிருந்தால்! புதிய கவர்னர்-ஜெனரல் பொறுப்பை ஏற்றதும் முதன் முதலில் கொடுத்த பார்ட்டி புதுடில்லி பத்திரிகையாளருக்குத்தான் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!

சுதந்திர இந்தியாவின் தலைநகரில் பத்திரிகைகாரரின் மதிப்பு உயர்ந்து நிற்பதற்கு முக்கிய காரணமாயிருப்பவர் ஸ்ரீ ஏ. எஸ். ஐயங்கார். அவருக்கு என் வாழ்த்துக்கள்.

# பி.எஸ்.ஜி. தர்மங்கள்

ரா. கி.

சில மாதங்களுக்கு முன்பு ஒருமுறை பாரதியார் மண்டப கைங்கரியத்துக்காகக் கோயமுத்தூர் போயிருந்தேன். நண்பர் சுப்ரி (கே. சுப்பிரமண்யம் எம். எல். ஏ.), "ஏதோ வந்ததுதான் வந்தீர்கள்; பூளை மேட்டுக்குப் போய்விட்டு வந்துவிடலாம்!" என்றார். "அங்கே பி. எஸ். ஜி. கைத்தொழில் கல்லூரி இருக்கிறது. கைத்தொழிற் கல்வி விஷயத்தில் உமக்கு மிக்க சிரத்தையாயிற்றே!" என்றார்.

ஸ்ரீ சுப்ரி சொன்னது உண்மைதான். கைத்தொழில் என்பது எனக்கு அடியோடு சாதிக்கமுடியாத காரியம். இராட்டையில் நூல் நூற்று அறுந்துபோனால் அதை வேறு யாராவதுதான் முடித்துக் கொடுக்க வேண்டும். எழுதும்போது பேனாவில் மை தீர்ந்து விட்டால் எனக்குக் கோபம் கோபமாய் வரும். வேறு யாராவதுதான் மை போட வேண்டும். இல்லா விட்டால் பேனாவுடன் பேனாவைக் கீழே எறிந்து உடைத்து விடலாமா என்று தோன்றும்.

கடவுள் கொடுத்த கையை நல்ல முறையில் உபயோகிக்கத் தெரியாமல் வளர்க்கப் பட்டதினாலும், பள்ளிக்கூடங்களில் அதே மாதிரி பயிற்சி செய்யப்பட்டதினாலும் வாழ்க்கையில் நான் அடைந்து வரும் அசௌகரியங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. யாராவது ஒருவர் சுவரில் சரியானபடி ஆணி அடித்து ஒரு படத்தை மாட்டிவிட்டால் எனக்கு ஒரே அதிசயமாகவும் பொறாமையாகவும் இருக்கும். படுக்கைக்கு மேலே கொசுவலை கட்டிக் கொள்வது என்பது என்னால் முடியவே முடியாத காரியம்.

சில வருஷங்களுக்கு முன்னால் இங்கிலாந்தில் ஒரு பிரம்மாண்டமான ரயில்வே ஸ்ட்ரைக் நடந்தது. என்ஜின் டிரைவர்கள் கூட வேலை நிறுத்தம் செய்து விட்டார்கள். அதனால் ரயில்கள் நின்றுபோய் விட்டன என்று நினைக்கிறீர்களோ? அதுதான் இல்லை. இங்கிலாந்தில் உள்ள காலேஜ் மாணவர்களைக் கொண்டு ரயில்களை ஓட்டிச் சமாளித்தார்கள். வேலை நிறுத்தம் தீரும் வரையில் காலேஜ் மாணவர்கள்தான் ரயில் ஓட்டினார்கள்.

நம் நாட்டில் எப்படி? இங்கேயும் ரயில்வே டிரைவர்களின் வேலை நிறுத்தம் நடந்தது. அந்தச் சந்தர்ப்பத்தில் மாணாக்கர்களைக் கூப்பிட்டு ரயிலை ஓட்டு என்று சொல்லியிருக்க முடியுமா? அப்படியே சொன்னாலும் மாணாக்கர்கள் முன் வருவார்களா? மாணாக்கர்கள் முன் வந்தாலும் மாணவர்கள் ஓட்டும் ரயிலில் பிரயாணிகள் ஏறுவார்களா? ஒருநாளும் ஏற மாட்டார்கள். அதைக் காட்டிலும் கால் நடையாக நடந்துபோய் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளுவோம் என்று சொல்வார்கள்.

பிரயாணிகள் இல்லாத கூட்ஸ் வண்டிகளைத்தான் மாணாக்கர்கள் ஓட்டுகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். ரயில் குறிப்பிட்ட இடத்துக்குப் போய்ச்சேருமா? ரயில் தண்டவாளத்தில் ஓடும் என்றே சொல்ல முடியாது. அதுபாட்டுக்கு இறங்கி டவுனுக்குள் இருக்கும் காப்பிக் கிளப்பையோ சினிமாக் கொட்டகையையோ நோக்கிப் போக ஆரம்பிக்கும்! ஆனால் அங்கேயாவது போய்ச் சேருமா? சில அடி தூரம் பிரயாணம் செய்வதற்குள் கீழே விழுந்து சண்டித்தனம் செய்யும்.

நம் நாட்டு வாலிபர்கள் இப்படிக் கையாலாகாதவர்களாயிராமல், கை ராட்டை முதல் ரயில் என்ஜின் வரையில் ஓட்டத் தெரிந்தவர்களாயிருக்க வேண்டும் என்பது என் கருத்து.

ஆகவே ஸ்ரீ சுப்ரி விஷயத்தைச் சொன்னதும் பூளைமேட்டுக்கு அவருடன் புறப்பட்டேன். போகும் வழியில் "பூளைமேட்டில் என்னென்ன ஸ்தாபனங்கள் இருக்கின்றன?" என்று கேட்டேன். சுப்ரி சொன்னார்:—"பூளைமேட்டில் பி. எஸ். ஜி. குடும்பம் பழமையான பெரிய குடும்பம். நம்முடைய காலத்தில் ஸ்ரீ பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு குடும்பத்தில் பிரபலஸ்தர். அவருக்கு மூன்று சகோதரர்கள். குடும்பத்தின் பத்து லட்சம் ரூபாய் சொத்தை நாலு சகோதரர்களும் பிரித்துக் கொண்டபோது ஸ்ரீ ரங்கசாமி நாயுடு ஒரு யோசனை சொன்னார். 'சொத்தை ஐந்து பங்காகப் போடுவோம். ஒரு பங்கை தர்மத்துக்கு வைப்

போம்' என்றார். அதை மற்ற சகோதரர்கள் ஒப்புக் கொண்டார்கள். அந்த இரண்டு லட்ச ரூபாய் மூலதனத்தைக் கொண்டு பி. எஸ். ஜி. தர்மஸ்தாபனம் தொடங்கப்பட்டது. இப்போது பி. எஸ். ஜி. தர்ம ஸ்தாபனத்துக்குப் பல லட்ச ரூபாய் ஐவேஜு இருக்கிறது!"

"பல லட்சம் ரூபாய் சொத்து எப்படிச் சேர்ந்தது? தர்ம ஸ்தாபன நிதி யெல்லாம் பொதுவாகக் குறைவதல்லவா செய்யும்!" என்று கேட்டேன்.



ஸ்ரீ ரங்கசாமி நாயுடு

"தர்ம ஸ்தாபன நிதியைக்கொண்டு ஒரு இயந்திரத் தொழிற் சாலை அமைத்தார்கள். அந்தத் தொழிற்சாலையில் 100 மாணவர்கள் தொழிற் கல்வி கற்கிறார்கள். இன்னும் 300 மாணவர்கள் மேற்படி தொழிற்சாலையை யொட்டி ஆரம்பித்த கைத்தொழிற் கல்லூரியில் பயிற்சி பெறுகிறார்கள். தொழிற்சாலையை நன்றாக நிர்வகித்து வருவதால் நல்ல லாபம். அதிலும் யுத்த காலத்தில் லாபத்தைக் கொழித்துக் கொட்டி விட்டார்கள். இதனால் நிதி ஏராளமாகப் பெருகிவிட்டது."

"அடி சக்கை!" என்றேன் நான்.

என்ஜினியரிங் காலேஜ் ஏற்படுத்துங்கள் என்றால், "பணமில்லை" என்று சர்க்கார் மூக்கால் அழுகின்றனர். வெறும் பஞ்சப் பாட்டுப் பாடத் தொழிற் கல்வி கற்க விரும்பும் மாணாக்கர்களை விரட்டியடிப்பதற்குப் பதிலாகச் சர்க்காரே சில முக்கிய தொழிற்சாலைகளை ஏன் ஏற்படுத்தக்கூடாது? ஏற்படுத்தி மேற்படி தொழிற்சாலை லாபத்தைக் கொண்டு மேலும் சில என்ஜினியரிங் கல்லூரிகளை ஏன் ஏற்படுத்தக் கூடாது? எவ்வளவு அவசியமான காரியம்,—எவ்வளவு எளிதில் நடக்கக் கூடியது என்றும் பூளைமேட்டு ஸ்தாபனங்கள் சாட்சி சொல்கின்றன.

"பி. எஸ். ஜி. தர்மஸ்தாபனக் கைத்தொழில் இன்ஸ்டிடியூட்" என்று தெளிவாக எழுதி யிருந்த கோபுர வாசலில் பிரவேசித்து உள்ளே சென்றோம். விஸ்தாரமான கைத்தொழிற் சாலையைப் பார்த்தோம். பற்பல இயந்திரங்களைப் பார்த்தோம். அவை இயங்குவதைப் பார்த்தோம். பின்னர் சிலர் அந்த இயந்திரங்களைப் பார்த்துப் படித்துக் கொள்வதையும் கவனித்தோம்.

இந்த இயந்திரத் தொழிற்சாலையில் சில இயந்திரங்களும் செய்யப்படுகின்றன. இவ்விடத்தில் செய்த தண்ணீர் இறைக்கும் பம்பு செட்டுகள் பல காணப்பட்டன. ஒரு சின்ன அளவு நெல் அரைக்கும் இயந்திரத்தைப் பார்த்தேன். இந்தத் தொழிற்சாலையில் புதிதாகச் செய்த மாடல் அந்த இயந்திரம். விலை ரூபாய் 60 என்று தெரிவித்தார்கள். இதில் ஒன்று வாங்கிக் கொண்டால் ஒரு குடும்பத்துக்கு வேண்டிய அளவு தினந்தோறும் நெல்லை அரைத்து அரிசியாக்கிக் கொள்ளலாம். தவிடு போகாமலே நெல்லை அரைக்கலாம். அக்கம் பக்கத்து வீட்டாருக்கும் நெல் அரைத்துக் கொடுக்கலாம்.

பிறகு, கைத்தொழிற் கல்லூரிக்குப் போனோம். சுமார் முந்நூறு மாணவர்கள் பல வகுப்புக்களாகப் பிரிந்து பற்பல இயந்திரத் தொழில்கள் சம்பந்தமான கல்வியைக் கற்றுக் கொண்டிருந்தார்கள். கோயமுத்தூரில் நூல் ஆலைகள் அதிகம். துணி ஆலைகளும் உண்டு. ஆகையால் நூல் நூற்கும் இயந்திரம், துணி நெய்யும் இயந்திரம் சம்பந்தமான விவரங்கள் விசேஷமாகக் கற்பிக்கப்பட்டு வந்தன.

இந்தக் கல்லூரியில் படித்துத் தேறிய பல இளைஞர்கள் நூல் ஆலைகளில் நல்ல உத்தியோகங்களில் இருக்கிறார்களாம்.

எல்லாவற்றையும் பார்த்துக் கேட்டுத் தெரிந்து கொண்டதும் இத்தகைய பரம முக்கியமான தேசத் தொண்டைச் செய்த புண்ணிய புருஷரைப் பார்க்க வேண்டும்; பார்த்து ஒரு கும்பிடு போட வேண்டும்' என்று தோன்றியது. "ஸ்ரீ ரங்கசாமி நாயுடு எங்கே?" என்று கேட்டேன். சில காலத்துக்கு முன்புதான் அவர் புகழுடம்பை இவ்வுலகில் நிலைநாட்டி விட்டுப் பூத உடலைத் துறந்து வானுலகம் சென்றதாகத் தெரிய வந்தது. "அடாடா! சில காலத்துக்கு முன்பு இங்கே வராமற் போனோமே?" என்று வருந்தினேன்.

பிறகு "இப்போது யார் நடத்து கிறார்கள்?" என்று விசாரித்தேன். ஸ்ரீ கங்கா நாயுடுவின் தலைமையில் காலஞ் சென்ற பெரியவரின் குமாரர்கள் நிர்வகித்து வருவதாகத் தெரியவந்தது. குமாரர்களில் மூத்தவர் ஸ்ரீ ஜி. ஆர். தாமோதரன் இங்கிலாந்துக்குச் சென்று தொழிற் பயிற்சி பெற்றுத் திரும்பி வந்து இந்த மகத்தான தர்ம ஸ்தாபனத்தின் நிர்வாகப் பொறுப்பை ஏற்று நடத்தி வருகிறார். அவருடைய சகோதரர்கள் ஸ்ரீ ஜி. ஆர். கோவிந்தராஜுன், ஸ்ரீ ஜி. ஆர். வெங்கடேசன் ஆகியவர்களும் மற்ற அலுவல்கள் பார்ப்பதோடு இந்தப் பணியிலும் சிரத்தை காட்டி வருகிறார்கள்.

ஸ்ரீ ஜி. ஆர். சகோதரர்களை வாழ்த்திப் பாராட்டுகிறேன். அதோடு விட்டுவிடத் தயாராயில்லை. தாய் ஒரு அடி பாய்ந்தால் குட்டி எட்டு அடி பாயும் என்பார்கள். இங்கே தந்தையார் ஆரம்பித்த அரும் பெரும் பணியைப் புதல்வர்கள் ஒன்றுக்கு எட்டு பங்காக வளர்த்துக் காட்ட வேண்டும். நம் கல்வி மந்திரி ஸ்ரீ டி. எஸ். அவிநாசிலிங்கம் அவர்கள் எழுதி யிருப்பதுபோல் இப்போதுள்ள தொழிற் கல்லூரியை ஒரு பெரிய என்ஜினியரிங் கலாசாலையாக ஆக்க வேண்டும். அதற்கு மேலே போகவும் தயாரா யிருக்க வேண்டும்.

கல்வி மந்திரி எங்கே அவ்விதம் எழுதி யிருக்கிறார் என்று கேட்கிறீர்கள்? சொல்ல மறந்து விட்டேன், மன்னிக்க வேண்டும்.

"ஸ்ரீ பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு நினைவு மலர்" என்ற பிரசுரத்தில் எழுதி யிருக்கிறார். நாயுடுகாருவிடம் பக்தியுள்ள சில உற்சாகிகள் இந்த மலரைப் பதிப்பித்து வெளியிட்டிருக்கிறார்கள். மிக நல்ல உயர் தரமான பிரசுரம். இதைப் பார்த்ததும் ஸ்ரீ ரங்கசாமி நாயுடுவை ஜீவியவந்தராகப் பார்க்கவில்லையே என்ற வருத்தங்கூட எனக்கு ஓரளவு மாறி விட்டது. அவருடைய கம்பீரமான திருவுருவப் படங்கள் அவ்வளவு இடங்களில் இந்த வெளியீட்டில் காணப்படுகின்றன. அவர் சேர்ந்திருக்கும் குருப் போட்டோக்களும் ஏராளமாய் இருக்கின்றன. பல அறிஞர்களும் பிரமுகர்களும் ஸ்ரீ ரங்கசாமி நாயுடுவைப் பற்றி எழுதியுள்ள கட்டுரைகளும் இந்தப் பிரசுரத்தில் நிறைந்திருக்கின்றன.

தமிழ் நாட்டிலேயே மிகச் சிறந்த தர்மத்தை மிகச் சிறந்த முறையில் செய்த பெரியவரைப் பற்றி இந்த நினைவு மலர் மூலம் நன்கு தெரிந்து கொள்ளலாம். வேண்டுவோர், "ஸ்ரீ பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு ஞாபகார்த்தக் கமிட்டி, பூளைமேடு" என்ற விலாசத்துக்கு எழுதவும். விலை குறிப்பிடப் படவில்லை. ஆதலின் ஒருவேளை இலவசமாய் அளிக்கப்படலாம் என்று நினைக்கிறேன்.



காந்தியடிகளின் அஹிம்சைக் கொள்கையையும் அரசியல் இலட்சியத்தையும் இந்தியாவின் எங்கும் பரப்ப ஒவ்வொரு ஜில்லாவிலும் தொண்டர்கள் பயிற்சி முகாம்கள் நடத்தும் திட்டத்தை யொட்டி, அத்தகைய முகாம் ஒன்று சேவாதளம் என்ற பெயரில் நெல்லை ஜில்லாவில் நிறுவப்பட்டது. தாமிரபருணி தீரத்தில் குறுக்குத் துறையில் ஸ்ரீ சோமயாஜுலு அவர்கள் தலைமையில் நடைபெற்ற மேற்படி முகாமில நாற்பது வாலிபர்களை ஒரு மாத காலம் சிறந்த முறையில் பயிற்சி அளிக்கப் பட்டார்கள்.

28—6—48 அன்று கனம் பக்தவத்சலம் அவர்கள் தொண்டர்களுக்கு நற்சாட்சிப் பத்திரங்கள் வழங்கினர். பயிற்சி முகாம் இனிது முடிந்தது.

# பெண் பிடிக்கிறது....

எஸ். வி. எஸ்.

"அவள் பெயர் கனகமாம். வயது பதினேழு அல்லது பதினெட்டு இருக்குமாம். நிறம் நல்ல சிவப்பாம். மூக்கில் வைர பேஸரியும், காதில் வைரக் கம்மலும் கழுத்தில் வைர அட்டிகையும் போட்டுக் கொண்டிருக்கிறாளாம். அவள் தந்தை மிராசுதாராம். பெண்ணுக்கு இன்னும் எவ்வளவோ செய்வாராம். அப்படியானால் அவள் எவ்வளவு அழகாக இருப்பாள்!" என்று நினைத்து நினைத்து சங்கரன் கற்பனையில் கனகத்தின் ஒரு உருவம் தீட்டி மகிழ்ந்து கொண்டிருந்தான்.

இப்படி ஒரு வாரம் கழிந்தது அவனுக்கு.

எட்டாவது நாள் கனகமும், அவள் பெற்றோரும் சங்கரன் வீட்டுக்குப் பெண்ணைக் காட்டுவதற்கும் மேற்கொண்டு பேசுவதற்கும் வந்திருந்தார்கள்.

நேரில் பார்த்த கனகத்துக்கும் சங்கரனின் கற்பனையில் வாசம் செய்த கனகத்திற்கும் எவ்வளவு வித்தியாசம்! முதலில் இவன் கற்பனையில் தோன்றிய கனகத்துக்கு ஒன்றரைக் கண் இல்லையே! "அம்மா, இந்த இடம் எவ்வளவு நல்ல பணம் படைத்த இடமாக இருந்தாலும் எனக்கு மனைவியாக ஒன்றரைக் கண்ணுள்ள பெண் வேண்டாம்!" என்றான்.

* * *

அடுத்தாற் போல், ஒரு கடிதம் சங்கரனுடைய பெற்றோருக்கு வந்தது. சங்கரனுக்குத் தம் பெண்ணைக் கொடுக்க வேண்டும் என்ற ஆசையுடன் ஒரு ஆயிர ரூபாய்ச் சம்பளக்காரர் எழுதியிருந்தார்.

அந்தப் பெண்ணைப் பற்றி விசாரித்ததில், "பெண் மாநிறமாக இருப்பாள். படிப்பு அதிகம் இடையாது. வீட்டு வேலைகள் நன்றாகச் செய்வாள். மூக்கும் விழியுமாக லக்ஷணமாக இருப்பாள்" என்று தெரிய வந்தது.

சங்கரன் மறுபடியும் தன் கற்பனையுலகில் சஞ்சரிக்க ஆரம்பித்தான். 'மாநிற மேனியும் மூக்கும் விழியுமுள்ள பெண்ணைச் சிருஷ்டித்தான்.

பின்னர் சங்கரனுக்குப் பெண்ணைப் பார்க்க ஏற்பாடு செய்யப்பட்டது.

கற்பனை செய்து பார்த்த பெண்ணுக்கும் நேரில் பார்த்த பெண்ணுக்கும் எவ்வளவு வித்தியாசம்! இந்த நிறத்துக்குத் தான் மாநிறம் என்று பெயரா?

"அம்மா! எனக்கு இந்தக் கறுப்புப் பெண் வேண்டாம்" என்றான் சங்கரன்.

* * *

"அப்பா! இம்மாதிரி ஒவ்வொரு பெண்ணுக்கும் ஒவ்வொரு குறை சொல்லித் தட்டிக் கழித்துக் கொண்டிருந்தால் உனக்கு என்றைக்குத்தான் கலியாணமாவது? அதை நாங்கள் என்றைக்குப் பார்த்துக் களிப்பது? பழைய கால சம்பிரதாயப்படி பெரியவர்களாகப் பார்த்து நிச்சயிக்கிறப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொண்டேன். உங்கள் அப்பா அந்தக் காலத்தில் என்னைப் பார்த்து விட்டுத் தான் கல்யாணம் பண்ணிக் கொண்டாரா? எங்கள் வாழ்க்கையில் என்ன குறைவு இருந்தது?" என்றாள் சங்கரனுடைய தாயார்.

சங்கரன் மௌனம் சாதித்தான். "குற்றமெல்லாம் என் கற்பனையிலிருக்கிறது. பெண்ணைப் பார்க்குமுன் கற்பனை பண்ணாமல்,—இப்படி இருப்பாள் அப்படி இருப்பாள் என்று எண்ணாமல்,—இருக்க முடியவில்லையே!" என்று மனதிற்குள் சொல்லிக் கொண்டான்.

* * *

"பெண் படித்த பெண். எஸ். எஸ். எல். சி வரைக்கும் படித்திருக்கிறாள். நன்றாகப் பாடவும் தெரியும். ஒற்றை நாடியான சரீரம். அவளுடைய பெற்றோருக்கு அவள் ஒரே பெண்" என்று சொல்லிக் கொண்டு ஒருவர் வந்தார்.

இத்தனை வர்ணனைகளுக்கும் பிறகு சங்கரனின் மனசு சும்மா இருக்குமா? "கற்பனை பண்ணாதே! கற்பனை பண்ணாதே?" என்று எவ்வளவோ மனசுக்கு அணை போட்டுப் பார்த்தான்—முடியவில்லை ஏதோ ஒரு உருவத்தைச் சிருஷ்டித்துக் கொண்டு தான் இருந்தது அவன் மனசு.

இவ்விதம் கற்பனை செய்து கொண்டே அந்தப் பெண்ணைப் பார்க்க அவன்



அருகே சங்கரன் போனான். பெண்ணையும் பார்த்தான். அவனுக்குச் சொல்ல முடியாத அதிசயமாயிருந்தது!

வாஸ்தவம்; அவன் கற்பனை செய்து கொண்டு போன பெண்ணாக அவன் இல்லை. எப்படி இருக்க முடியும்?

அந்தப் பெண் தான் அவன் மனசில் ஏற்கெனவே குடி கொண்டிருந்த பெண்ணாயிற்றே!

"இவள் அம்புஜம் அல்லவா?" என்றான்.

"ஆமாம்!" என்று அவர்களுடைய பெற்றோர்கள் கூறினார்கள்.

* * *

ஐந்து ஆண்டுகளுக்கு முன் இதே அம்புஜத்தை சங்கரன் பார்த்திருக்கிறான். சங்கரன் வீட்டுக்கு நாலாவது வீட்டில் தான் இருந்தாள். சங்கரன் வெளியே புறப்படும் போதெல்லாம், அவளும் குறுக்கே வருவாள். அவளுடைய அழுக்குப் பாவாடையையும், பரட்டைத் தலையையும், பாழ் நெற்றியையும் கண்டாலே அவனுக்குக் கோபம் கோபமாக வரும். சதா திட்டிக் கொண்டேயிருப்பான். அந்த அவலக்ஷணம்பிடித்த அம்புஜமா இப்போது மாந்தளிர் மேனியோடு பூங்கொடிபோல் நிற்பது! அவளைப் பார்த்த சங்கரனுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை! இதுவும் கனவல்லவே!

மறுநாள் வெளியிலிருந்து வந்த சங்கரன் "அம்மா! கடைசியில் உன் மனோபீஷ்டம் நிறைவேறிவிடும் போலிருக்கிறதம்மா?" என்றான்.

"அப்பா! உனக்குப் பெண் பிடித்து விட்டதா? ஈசுவரன் கடைசியில் என் பிரார்த்தனைக்குச் செவி சாய்த்தாரா?" என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினாள்.

சங்கரன், "உன் பிரார்த்தனைக்கு மட்டுமா? என் பிரார்த்தனைக்கும் தான்" என்றான் மனசுக்குள்.

மறுநாள் சங்கரனின் தந்தைக்கு ஒரு கடிதம் வந்தது.

"அம்புஜத்துக்குப் பிள்ளையைப் பிடிக்காததால்......" என்று ஏதோ அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தது.

அதே சமயத்தில் அம்புஜத்தின் தந்தைக்கும் ஒரு கடிதம் வந்தது.

அதில் "பிள்ளைக்குப் பெண் பிடித்து விட்டதால் மேற்கொண்டு......" என்று எழுதியிருந்தது.

இதைக் கேட்டு, அம்புஜம் எகத்தாளமாய்ச் சிரித்த சிரிப்பின் ஒலி சங்கரனின் இதயத்தில் எதிரொலித்தது. அவன் 'பூனைக்கும் ஒரு காலம் வந்தது போலிருக்கிறது' என்று எண்ணினான். உடனே அவன் இதழ்களிலும் ஒரு இன்பப் புன்னகை தோன்றியது.

# இப்படியும் ஒரு உலகம்!

ஆசி

"உலகம் ரொம்ப ரொம்பக் கெட்டுப்போச்சு, சார்!" என்றார் குருசாமி.

"வாஸ்தவம்" என்று ஆமோதித்தார் தர்மராஜ்.

"எக்காலையும்விட இன்றைக்கு மகா மோசம், சார்!"

"வாஸ்தவம். நாளைக்கு இதைவிட மோசமாயிருக்கும், சார்!"

"இன்றைக்குத்தான் மோசம். நாளைக்கு இவ்வளவு மோசமாக இருக்காது, சார்!"

"இன்றைக்கு என்ன, சார்! அப்படி 'ஸ்பெஷ'லான மோசத்திலே உலகம் இறங்கிவிட்டது?"

"சொன்னால் நம்பமாட்டீர்கள், சார்! அதையேன் சொல்ல வேணும்?"

"சும்மா சொல்லுங்கள், சார்!"

"சப் ரிஜிஸ்டரார் ஆபீஸ் வேலுப்பிள்ளை இருக்கிறாரே......"

"ஆமாம். அவர் உங்களுடைய ஆப்த நண்பராச்சே."

"ஆப்த நண்பராவது, மண்ணாங்கட்டியாவது! ஆப்த நண்பனை அணுவளவும் நம்பாதே என்று ஒரு பழமொழியை உண்டு பண்ணக் கூடிய அளவுக்கு நடந்து கொண்டு விட்டார்."

"அப்படியா? வேலுப்பிள்ளை தங்கமான மனிதராயிற்றே! அப்படியெல்லாம் நடந்து கொள்பவர் அல்லவே!"

"அதனால் தான் சொன்னால் நம்பமாட்டீர்களென்று நான் முந்தியே சொன்னேன்."

"நம்புகிறேன், சார். மேலே சொல்லுங்கள்!"

"ஐந்து மணியிருக்கும். நானும் வேலுப்பிள்ளையும் ஸ்டேஷன் பக்கமாய்ப் போய்க் கொண்டிருந்தோம். அப்போது வேலுப்பிள்ளையினுடைய பழைய நண்பர் ஒருவர்—பெயர் நடராஜனாம்—வந்து சேர்ந்தார். அவரைக் கண்டதும் வேலுப்பிள்ளை, 'காப்பி சாப்பிடலாம். வாருங்கோ' என்று ஒரு ஹோட்டலுக்குள் நுழைந்தார். நான் வரவில்லை என்றேன். வலுக்கட்டாயமாக இழுத்துக் கொண்டு போனார். மூன்று கப் காப்பிக்கு 'ஆர்டர்' பண்ணினார்."

"நல்ல காரியம்தானே செய்திருக்கிறார். ஒருவேளை 'ஸ்வீட்' காரம் ஆர்டர் பண்ணவில்லையே என்று நினைக்கிறீர்களோ?"

"விஷயம் இனிமேல்தானே இருக்கிறது! மூன்று கப் காப்பியும் வந்தது. ஆளுக்கு ஒரு கப் சாப்பிட்டோம். பையன் பில்லைக் கொண்டு வந்து என் முன்னாலே வைத்தான். அப்போது அவர், என்ன சார் செய்யணும்?"

"பில்லைத் தான் வாங்கிக் கொள்ள வேண்டும்."



"அப்படிச் சொல்லுங்கோ! ஒரு சின்னப் பிள்ளைக்குக் கூட இந்த மரியாதை தெரியுமே. மனுஷன் பில்லை எட்டிக் கூடப் பார்க்கவில்லை. பிறகு நான் தான் எடுத்தேன்."

"எடுக்கும்போதாவது.........?"

"என்னிடம் கொடுங்கோன்னு சொன்னாரா? கிடையவே கிடையாது. ரொம்ப சுவாரஸ்யமான சம்பாஷணை

யில் அடிபட்டவர் மாதிரி நண்பருடன் பேசிக் கொண்டிருந்தார். என் மனசு எப்படி இருக்கும்? இனிமேல் இப்படிப் பட்டவர்களோடு சகவாசமே வைத்துக் கொள்ளக் கூடாது என்று பில்லை எடுத்துக் கொண்டு புறப்பட்டேன்."

"அப்போதாவது......"

"உம்............வாயைத் திறந்தாரா? அல்லது என்னை எட்டித்தான் பார்த்தாரா? என் செலவிலே தானும் சாப்பிட்டு, தம் நண்பனுக்கும் சப்ளை செய்ய வேண்டுமென்று 'பிளான்' போட்டு என்னை இழுத்துக் கொண்டு போன மனுஷனல்லவா அவர்!"

"நீங்கள் என்ன செய்தீர்கள், சார்? பணம் கொடுக்காமல் வெளியே வந்து விட்டீர்களா?"

"சார்! என்னைப்போல பைத்தியங்கள் இருக்கிற வரைக்கும் உலகம் இப்படித்தான் தலை கீழே போய்க்கொண்டேயிருக்கும். ஆறு அணாவை எறிந்து விட்டு வெளியே கிளம்பினேன். நீங்கள் சொன்னமாதிரி செய்திருக்க வேண்டியது. ஏதோ அப்போது புத்தி தடுமாறிப் போச்சுது."

"நல்ல மனிதர்களைப் போலக் காணப்படுகிறவர்களுடைய யோக்கியதையெல்லாம் இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களிலே சாயம் வெளுத்துப் போகிறது. சரி, நேரமாகிறது. நான் போய் விட்டு வருகிறேன், சார்!' என்று சொல்லிவிட்டு மிஸ்டர் தர்மராஜ் நடந்தார். வேலுப் பிள்ளையோடு இனி சகவாசம் கூடாது என்று உறுதியான மனப் பான்மை பூண்ட ஸ்ரீமான் குருசாமியும் தம் வீட்டை நோக்கி நடந்தார்.

## ஒரு வருஷம்தான்!



க்ஷௌரம் செய்துகொள்ளப் போனவர்:—போன தடவை நீதானா எனக்குத் தலை வெட்டினாய்?

க்ஷௌரக்காரர்:—இருக்காது, சார்! நான் இந்தக் கடையில் வேலைக்கு வந்து ஒரு வருஷம் தான் ஆகிறது.

கொஞ்ச தூரம் போனதும், தனக்கெதிரே வேலுப் பிள்ளை வருவதை மிஸ்டர் தர்மராஜ் கண்டார். எப்படியாவது அவரைப் பேச்சுக் கிழுக்க வேண்டும் என்ற ஆசை மிஸ்டர் தர்மராஜுக்கு உண்டாயிற்று. இவருடைய ஆசையைப் பூர்த்தி செய்ய வேலுப் பிள்ளை இவரைக் கண்டதும் நின்று விட்டார்.

"சார், மிஸ்டர் குருசாமியைப் பார்த்தீர்களா?"

"ஆமாம், சார்! இப்போதான் பார்த்தேன். மூன்று நிமிஷந்தான் இருக்கும். வீட்டுக்குப் போகிறார்."

"ரொம்ப வந்தனம். அவர்களைப் பார்த்து விட்டுத்தான் மறுவேலை."

"அப்படி என்ன அவசரம்?"

"உலகத்திலே சில மனிதர்களுடைய பெருந்தன்மையைப் பார்த்தால் நாமெல்லாம் தலை கவிழ வேணும். சார். மிஸ்டர் குருசாமியைப் பெருந்தன்மையின் அவதாரம் என்றே சொல்லலாம்."

"அவருடைய குடும்பத்திலே எல்லாருமே அப்படித்தானென்று கேள்வி."

"அதிலும் குருசாமி ரொம்ப விசேஷம் என்பது என்னுடைய அபிப்பிராயம். இன்றைக்கு நடந்த ஒரு சம்பவத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள். சாயந்திர வண்டியிலே என்னுடைய நண்பர் ஒருவர் வந்தார். தற்செயலாய் ஸ்டேஷன் பக்கம் நானும் மிஸ்டர் குருசாமியும் போயிருந்தோம். வந்தவர் எனக்கு ரொம்ப வேண்டிய பழைய நண்பர். அவருக்கு ஒரு கப் காப்பியாவது கொடுக்க வேண்டும் என்று ஹோட்டலுக்குள்ளே அழைத்துக் கொண்டு போனேன். மிஸ்டர் குருசாமியையும் வலுக்கட்டாயமாக இழுத்துக் கொண்டு போனேன்."

"வரமாட்டேன் என்றாரோ?"

"ஆமாம், சார். தான் யாருக்குமே பாரமாயிருக்கக் கூடாது என்று நினைக்கிற மனுஷன் அவர் ஒருவர்தான், சார். அவரைப்போல மற்றவர்களெல்லாம் இருந்தால் இந்த உலகம் இருக்கும் விதமே வேறு, சார்."

"வாஸ்தவம்."

"ஆளுக்கு ஒரு கப் காப்பி கொண்டு வரச் சொன்னேன். சொன்னது நான் தான். என் நண்பரை உபசரிக்க நான் கொடுக்க வேண்டிய மரியாதை அல்லவா?"

"ஆமாம்."

"காப்பியைக் குடித்தோம். என் நண்பரோடு பழைய கதைகளைப் பேசிக்கொண்டிருக்கும்போது, மிஸ்டர் குருசாமியைக் கொஞ்ச நேரம் கவனியாமலிருந்து விட்டேன்."

"அதிலே ஒன்றும் தப்பு இல்லையே."

"தப்புதான், சார். அவர் ஏதோ அவசரமாய் எழுந்து போய் விட்டார். என்ன துயரம் தரும் செய்தி வந்ததோ என்னவோ......"

"அப்படி ஒன்றும் இராது."

"அப்படி ஒன்றும் இருக்கக் கூடாது, சார். ஹோட்டல்காரர், 'அவர் ரொம்பக் கவலையோடு போனது போலத்தான் தோன்றியது' என்று சொன்னார். அப்படி அவசரமாய்ப் போகிற சமயத்திலேயும் அவருடைய பெருந்தன்மையைப் பாருங்கோ. என்னுடைய சம்பாஷணைக்குப் பங்கம் வரப்படாது என்று என்னிடத்திலே 'போகிறேன்' என்று கூடச் சொல்லவில்லை. அது மட்டுமா? மூன்று கப் காப்பிக்கும் தானே காசைக் கொடுத்து விட்டுப் போயிருக்கிறார்!"

"அது வேறேயா? நமக்கெல்லாம் அந்தப் புத்தி வராது."

"போகிறதாகச் சொன்னால் நான் பில்லைக் கேட்பேனும். அதனாலே கோபித்துக் கொண்டாலும் பரவாயில்லை என்று போய்விட்டார். அவர் மனம் போன பெரும் போக்கைப் பார்த்தீர்களா?"

"இப்படிப்பட்ட மனிதர்கள் நாட்டிலே ஒருவர் தான் உலகத்திலே இருப்பார்கள், சார்!"

"ஆயிரத்திலே ஒன்று என்று சொல்லுங்கள். சரியாச் சொல்லப் போனால் தலைமுறைக்கு ஒன்று என்று தான் சொல்லவேணும். அவரைப் பார்த்து, என்னுடைய அசட்டையான போக்குக்காக மன்னிப்புக் கேட்டு ஆறு அணாவையும் அவர் கையிலே கொடுக்கா விட்டால் எனக்கு இன்றைக்குத் தூக்கம் வராது, சார். போய் விட்டு வருகிறேன், சார்' என்று சொல்லி விட்டு வேலுப்பிள்ளை நடந்தார்.

தப்பர்த்தம் பண்ணுவதிலும் இரண்டு வகைகள் உண்டு என்பதை அன்று தான் மிஸ்டர் தர்மராஜ் தெரிந்து கொண்டார்.

# ஆகாச வெடி

சிறு குழந்தைகளுக்கு ரேஷன் அளிப்பது சம்பந்தமாகச் சர்க்கார் ஆலோசனை செய்து வருகிறது.

ஒரு செய்தி.

ஆலோசனை முடிவதற்குள் சிறு குழந்தைகள் பெரிய குழந்தைகள் ஆகி விடுவார்கள் போலிருக்கிறது!

★

ஹைதராபாத்துக்கு மருந்து வகைகள் அனுப்ப ஒரு விமானம் விட அனுமதி அளிக்குமாறு பாகிஸ்தான் இந்தியாவைக் கேட்டுக் கொண்டிருக்கிறது.

புதுடில்லிச் செய்தி.

என்ன மருந்து? வெடி மருந்து தானோ?

★

திருப்பதியில் ஒரு குடம் ஜலம் ஒன்றரை ரூபாய்க்கு விற்கிறது. யாத்ரிகர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள்.

ஒரு செய்தி.

திருப்பதியில் இந்தச் சமயத்தில் தண்ணீர் கலக்காத பால் கிடைத்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை.

கும்பகோணத்தில் ஒரு பச்சை மரம் தீப்பற்றி எரிந்தது.

பத்திரிகைச் செய்தி.

இது வெறும் பச்சைப் புளுகாக இராது என்று நம்புகிறோம்.

★

மோட்டாரை இயக்கப் புதிய சக்தி கண்டுபிடிக்கப் பட்டுள்ளது.

ஜோஹனஸ்பர்க் செய்தி.

பத்துப் பேர் சேர்ந்து தள்ளுவது தான் அப்புதிய முறையாக இருக்குமோ?

★

ஆட்சேபகரமான மருந்து விளம்பரங்களைப் பத்திரிகைகளிலும், துண்டுப் பிரசுரங்களிலும் வெளியிடக் கூடாது என்று ம. மா. சர்க்கார் தடை உத்தரவு செய்துள்ளனர்.

நாகபுரிச் செய்தி.

மருந்துக்குக் கூட மேற்படி விளம்பரங்களை மத்திய மாகாணத்தில் காணமுடியாது இனிமேல்.

# வட்ட மேஜை

★

பொறையாறு
14—7—48

## சீர்திருத்தம் ஏற்படுமா?

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு.

"மாதர் முன்னேற்றம்" என்று எல்லோரும் பேசிக் கொண்டிருக்கும் இக்காலத்தில், பால்ய விதவைகளுக்கும், புருஷனால் தள்ளி வைக்கப்பட்ட ஸ்திரீகளுக்கும், படித்து முன்னேறுவதற்கான வழிகள் ஒன்றுமில்லை.

உதாரணமாக ஒரு பெண் ஐந்தாவது வகுப்பிலோ, அல்லது முதல் பாரத்திலோ தன் படிப்பை நிறுத்திக் கொண்டு விவாகம் செய்து கொள்ளுகிறாள். இருபத்திரண்டாவது வயதிலேயே கணவனை இழந்து விடுகின்றாள். அவள் பள்ளியில் சேர முற்பட்டால், ஜனனமான தேதியைக் குறிக்கும் அத்தாட்சிப் பத்திரம் வேண்டும்; அத்துடன் கடைசியாகப் படித்த வகுப்பைக் குறிக்கும் ஒரு ரிக்கார்டு தேவை. இந்தப் பெண் இருபது வருடங்களுக்கு முன் எங்கோ ஒரு குக்கிராமத்தில் பிறந்திருக்கலாம்.



அந்தக் குக்கிராமத்திலேயே ஏதாவது ஒரு வகுப்பு வரையில் படித்திருக்கலாம், அவளுடைய ஜனனத்தைக் குறிக்கும் தஸ்தாவேஜியே ஒரு வேளை காணாமற் போயிருக்கலாம். அவள் பத்துப் பன்னிரண்டு வருடங்களுக்கு முன் படித்த பள்ளிக்கூட ரிக்கார்டைத் தருவிப்பதும் இலேசான காரியமில்லை.

ஆகவே 'படிப்பு வேண்டாம், நர்ஸ் வேலைக்குப் போவோம்' என்றால் அதற்கும் மூன்றாவது பாரமாவது பாஸ் செய்திருக்க வேண்டும். அவ்வாறு பாஸ் செய்திருப்பதற்குத் தகுந்த அத்தாட்சி வேண்டும். இதிலும் அந்த ஜனன ரிக்கார்டு குறுக்கிடுகிறது. இவ்வளவும் போதாதென்று 'நர்ஸ் டிரெயினிங்'க்கு நானூறு ரூபாய் பணம் மொத்தமாக முதலிலேயே கட்டி விட வேண்டுமாம். அதைத் தவிர உடைச் செலவு வேறு. ஆகவே, பால்ய விதவை தன் வாழ்நாள் முழுவதும் கண்ணீர் வடித்துக் கொண்டே இருக்க வேண்டுமா? இது நியாயமா? படிப்பதற்கு வயது அவசியமா? அவசியமானாலும் பெண்ணைப் பார்த்தவுடனேயே வயதைச் சுமாராக நிர்ணயிக்க முடியாதா? இரண்டு வயது கூடவோ குறைந்தோ இருந்தால் தலை போய் விடுமா? சேர விரும்பும் பெண்ணைப் பரீட்சை செய்து சேர்த்துக் கொள்ளக் கூடாதா?

பெண் கல்விக்கு, அதுவும் மேற் கூறிய துரதிர்ஷ்டமான பெண்களின் கல்விக்கு சர்க்கார் ஏதாவது சீர்திருத்தம் செய்யுமா?

தேவி சரோஜா.

தேனி
11—7—48

## பஞ்சாயத்து போர்டு கவனிக்குமா?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

கடந்த ஜூலை 4-ந் தேதி கல்கி இதழில், "இளமணி" ஆசிரியர் ஸ்ரீ எ. என். சிவராமன் அவர்கள் எழுதிய "பிற நாடுகளில் ஸ்தல ஸ்தாபனங்கள்" என்ற புத்தகத்திற்கு தாங்கள் மதிப்புரை எழுதுகையில் "ஊழல் என்றால் என்ன?" என்று பள்ளி மாணவனைக் கேட்டால்கூட அவன் டக்கென்று, "ஏன் நம்முடைய பிரசித்தி பெற்ற ஜில்லா போர்டுகளும், முனிசிபாலிட்டிகளுந்தான், ஸார்!" என்று பதில் சொல்லுவான் என்று எழுதியிருந்ததைப் படித்தேன், அது ரொம்ப சரி.

எங்களூர் பஞ்சாயத்து போர்டிலிருந்து தேனிக்கும் அல்லிநகரத்திற்கும் இடையே ஒரு பூங்கா உண்டாக்கப்பட்டிருக்கிறது. அங்கே பெயருக்கு ஒரு ரேடியோவும், ஒரு வாசகசாலையும் இருக்கின்றன. வாசகசாலைக்கு வரும் பத்திரிகைகள் முதலில் எக்ஸிகியூட்டிவ் ஆபீஸர் முதலானவர்களின் வீடுகளுக்குச் சென்றுவிட்டு மாலை சுமார் 4-மணிக்குத்தான் வாசகசாலைக்கு விஜயம் செய்யும். சில சமயங்களில் இவைகள் வாசகசாலை என்று ஒன்று இருக்கின்றதே, அதற்காகத்தானே நாம் வாங்கப்பட்டோம் என்பதைக் கூட மறந்துவிட்டு ஆபீஸரின் வீட்டிலேயே தங்கிவிடும்.

பார்க்கிலுள்ள கிணற்றில் தண்ணீர், ஒன்று அல்லது இரண்டு அடி உயரந்தான் இருக்கிறது. அதை இறைத்து ஊற்றுவதற்குக் கூடச் சில சமயங்களில் ஆளில்லாமல் போய்விடுகிறது. இந்நிலையில், "தலைவர்களின் வீடுகளிலாவது காரியாலயங்களிலாவது இருந்தால் காலாகாலத்தில் தண்ணீர் கிடைக்குமே" என்று குரோட்டன் செடிகளும் ஏனைய செடிகளும் தங்கள் நிலைமை எண்ணி மனம் நொந்துபோய், தலை குனிந்த வண்ணமாக இருக்கின்றன. பார்க்கில் நறுமணம் கமழ் மலர்ச் செடிகள் இல்லையே என்று வருந்துபவர்கள் சிந்திக்க வேண்டிய அவசியமே இல்லை. ஏனென்றால், பார்க்குக்குப் பக்கத்தில்தான் யூனியன் குப்பை வண்டிகளையும் கக்கூஸ் வண்டிகளையும் கொண்டு வந்து கொட்டுகிறார்கள்.

ஒருவேளை, ஸ்ரீ சிவராமன் அவர்கள் எழுதிய புத்தகத்தை வாங்கிப் படித்த பின்பாவது எப்படி நடத்துவது என்ற யோசனை கூடப் போர்டாரவர்களுக்குத் தோன்றுமோ, என்னவோ!

எஸ். வீராசாமி.

ஜி. டி. சென்னை
13—7—48

## சிரமம் நீங்கும்

ஆசிரியர் ஐயா,

சில தினங்களாகப் போக்குவரத்து மந்திரி கனம் கோபால் ரெட்டி அவர்கள் நகரிலுள்ள பஸ் ஸ்டாண்டுகளைப் பார்வையிட்டதன் காரணமாகப் பஸ் போக்குவரத்தில் சில விசேஷ மாறுதல்கள் தோன்றியுள்ளன. உதாரணமாக மயிலாப்பூர்—பாரிஸ் பாதையிலும், தியாகராயநகர்—பாரிஸ் பாதையிலும் பஸ்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது.

கனம் மந்திரி அவர்கள் 'பர்மா ஷெல்' ஆபீஸ் பின் புறத்திலுள்ள பஸ் (தாகத்

நிற்கு) ஸ்டாண்டிற்கு விஜயம் செய்து, அங்குள்ள பிரயாணிகள் படும் இன்னல்களை ஒரு சிறிதளவாவது தீர்த்துவைக்க முயல வேண்டும்.

சென்னையிலிருந்து வெளியூர் போகும் பஸ்களில், நகர எல்லையைத் தாண்டியவுடன் மேலே மேலே பிரயாணிகள் திணிக்கப்படுகின்றனர். பெண்கள் நிற்பது கண்டு சகிக்க முடியாமல் எழுந்து நிற்கலாமென்றால், உயரம் போதாது. பிரயாணம் முடிவடைவதற்குள் அஷ்டாவதானம் செய்து முடித்தாகிவிடும்.

வயிற்றை வளர்க்க தினசரி சென்னை வர வேண்டி விரும்புவரும், சென்னையில் குடியிருப்பு வசதி கிடைக்காத காரணத்தால் அருகிலுள்ள அயன்புரம், வில்லிவாக்கம், பாடி போன்ற இடங்களில் போய் குடியேறியவர்களும் இப்பாதையில் ஓடும் தெ. 20 பஸ்களையே நம்பியுள்ளனர். இந்தப் பாதையில் பஸ் கிடைக்கும் என்று திட்டமாகச் சொல்ல முடியாது. ரொம்பப் பேர் காத்துக் காத்து அலுத்துப்போய்க் கடைசியில் நடக்கத் தொடங்கித் தங்கள் ஆபீஸ்களை நேரம் தவறி யடைகின்றனர். இப்போது இந்தப் பாதையில் நிலவும் மோசமான நிலைமைக்குச் சாவுமணி அடிக்க வேண்டுமாயின், உடனடியாகப் பொதுஜன சர்க்கார் குறைந்த பக்ஷம் 6 பஸ்களையாவது பி. டி. கம்பெனியுடன் சேர்த்து விட வேண்டும். ஆபீஸ் நேரங்களில் 10 நிமிஷத்திற்கு ஒன்றும் மற்ற நேரங்களில் 15 நிமிஷத்திற்கு ஒன்றுமாக பஸ்கள் விட முயற்சிக்க வேண்டும். அப்போதுதான் பிரயாணிகளின் சிரமம் சிறிதளவு நீங்கும்.

எம். கிருஷ்ணமூர்த்தி.

பம்பாய்
5—7—48

## தூக்கம் கலையவில்லை!

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

இன்ஜினியரிங் கலாசாலைகளில் ஒரு இடம் கிடைப்பதென்பது எவ்வளவு அரிய விஷயம் என்பது எல்லோருக்கும் தெரியும். நான் பம்பாயிலிருக்கும் வி. ஜே. டி. இன்ஸ்டிட்யூட்டில் ஒரு இடம் பெற்றுக் கொண்டேன். அவர்கள் எனக்கு அனுப்பியிருந்த அனுமதிச்சீட்டில் ஜுன் 28-ந் தேதி யன்று நான் பி. எஸ். ஸி. பாஸ் செய்த அத்தாட்சிப் பத்திரத்தோடு வந்து சேரவேண்டும் என்று குறிப்பிட்டிருந்தார்கள். சென்னை சர்வகலாசாலை பி. எஸ். ஸி. பரீட்சை முடிவு வெளியான மறுநாள், அதாவது ஜுன் 3-ம் தேதி அன்றே நான் ரெஜிஸ்திராருக்கு மூன்று ரூபாய் அனுப்பி, பரீட்சையில் நான் வாங்கிய மார்க்குகளின் குறிப்பை அனுப்பும்படிக் கேட்டிருந்தேன். ஜுன் 24-ம் தேதி இன்னுமொரு ஐந்து ரூபாய் அனுப்பி ஒரு தற்காலிக சர்டிபிகேட் (Provisional Certificate) அனுப்பும்படிக் கேட்டிருந்தேன். 28-ந் தேதி நெருங்க நெருங்க தந்தி மேல் தந்தி அனுப்பினேன். ஆனால் இதுவரையும் எந்த விதமான பதிலும் இல்லை.

இந்த தந்திகளும், ரூபாய்களும், கடிதங்களும் சென்னை சர்வகலாசாலையாரின் கும்பகர்ணத் தூக்கத்தை எந்தவிதத்திலும் கலைத்ததாகத் தெரியவில்லை.

ஆர். முத்தும்பெருமாள்.

சென்னை,
15—7—'48

## அவசரம் வேண்டாம்!

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

நான் விறகு வாங்கும் கடையில் ரேஷன் இருந்த காலத்தில் ஒரு குண்டு கட்டை ரூ. 1—0—0, ரூ. 1—1—0 ஆக இருந்தது. இன்று அதே கடையில் ஒரு குண்டு ரூ. 1—7—6, 1—8—0 என்று விற்கிறார்கள். தினசரி விலையை ஏற்றிக் கொண்டே போகிறார்கள். அவர்களைக் கேட்டால் "ரேஷன் இருந்த காலத்தில் உங்கள் தர்பார்; இப்போது எங்கள் தர்பார். நாங்கள் சொன்ன விலை தான் கொடுக்கவேண்டும்" என்று சொல்கிறார்கள். மற்றும் சில இடங்களில் ஒரு குண்டு இரண்டு ரூபாய்கூட விற்கிறார்கள். எப்படி இருக்கிறது நியாயம்! இதனால் ஏழை மக்கள் கட்டையை அதிக விலை கொடுத்து வாங்க முடியாமல் தவியாய்த் தவிக்கிறார்கள். ஏழைகள் வாங்கும் சாமான்களின் விலை உயர்கிறதே யொழிய, அவர்கள் பெரும் ஊதியத்தில் ஒரு எள்ளளவும் உயரவில்லை.



இப்படி அரிசி ரேஷனையும் அவசரப்பட்டு எடுத்து விட்டு ஏழை மக்களைத் திண்டாட வைக்க வேண்டாமென்று காருண்ய மிக்க காங்கிரஸ் மந்திரிகளை மிகத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

ஆ. ஏழுமலை.

குடந்தை
12—7—48

## என்று நீங்குமோ?

"கல்கி" ஆசிரியரவர்களுக்கு.

இன்று தமிழ் மொழிக்கு ஒரு முக்கிய இடம் தரப்பட்டிருக்கிறது. கல்லூரிகளிலும், ஏனைய கலைக்கழகங்களிலும் தமிழ் உயரிய இடத்திலே திகழ்கிறது. தமிழின் முன்னேற்றம் கண்டு நாம் மகிழ்கிறோம்.

கல்லூரிகளிலே தமிழாசிரியர்களின் மதிப்பும், தமிழின் மதிப்பும் எவ்வளவோ உயர்ந்திருக்கின்றன. என்றாலும் தமிழ் கற்பிக்க அரசியலார் வகுத்துள்ள முறை பழமையானது.

பி. ஏ., வகுப்பிலே 3-வது பாகமாக (III Part) தமிழ் (V Group Tamil) கற்கலாம். இந்த 5-வது பகுதித் தமிழ் சென்ற ஆண்டு குடந்தை கல்லூரியில் துவக்கப்பட்டது. சென்னை பல்கலைக் கழகத்திலே வேறு எந்தக் கல்லூரியிலும் இப்பாடம் இன்னும் துவக்கப்படவில்லை. சென்னை மேரி ராணி கல்லூரியில் இவ்வாண்டு ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இதிலே ஆறு பாடங்கள் உண்டு. அவற்றிலே நான்கு பாடங்களுக்குத் தமிழிலே படித்துத் தமிழிலே விடை எழுதவேண்டும். மீதியுள்ள Comparitive Dravidian Grammar, Early South Indian History என்ற 2 பாடங்களையும் ஆங்கிலத்திலேயே கற்று ஆங்கிலத்திலேயே எழுத வேண்டும்.

எதற்காக இந்த ஆங்கிலத்தில் கற்கும் முறை? தமிழ் இலக்கண மேம்பாட்டை, அதற்கும் வேற்றுமொழி இலக்கணத்திற்கு

## என்ஜினீயரிங் ஒர்க்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், கல்கத்தா




தங்கள் ஆதரவாளர்களுக்கு நன்றி செலுத்திக் கொள்வதோடு, புதிய உற்பத்திகளையும் உத்ஸாகத்துடன் வெளியிடுகிறார்கள்

# போனிக்ஸ்

- ★ ஸீலிங், பெடஸ்டல், எக்ஸாஸ்ட் மின்சார விசிறிகள்
- ★ பிக்ஸட் & ஆஸிலேடிங் டேபிள் விசிறிகள்.
- ★ I. C. D. P. ஸ்விட்சுகள் (10 - 15 ஆம்பியர்கள்) Half - Bakelite S. P. 5 - ஆம்பியர் ஸ்விட்சுகள்.
- ★ போர்ஸலின் ஸீலிங் ரோஸ் & கட் அவுட்கள்.

## உங்கள் தேவைக்கு சிறந்தவை

நம் நாட்டில், நம் மூலதனத்தில்,
நம் உழைப்பினால் உற்பத்தியானவை

●

தேவைகளுக்கு கீழ்க்கண்டவர்களுக்கு எழுதவும்:

# RM. S. & Co., Ltd.

**16, Broadway :: Madras**

['Phone: 4060] ['Grams: "AREMESCO"]

●

சென்னை நகரத்திற்கும், சமஸ்தானங்கள் உள்பட தென்னிந்தியா முழுவதிற்கும் உரிமை பெற்ற விநியோகஸ்தர்கள்.

## மகத்தான ஆரம்பம் 31-7-1948

மதுரை - சிந்தாமணி டாக்கீஸ்
கோயமுத்தூர் - ராஜா தியேட்டர்ஸ்
சேலம் - சென்ட்ரல் டாக்கீஸ்

# ★ போஜன் ★

P. S. கோவிந்தன்
R. பாலசுப்ரமணியம்
T. K. சம்பங்கி
K. K. பெருமாள்
M. G. சக்ரபாணி
E. R. சகாதேவன்
காளி N. ரத்னம்
M. E. மாதவன்
V. M. ஏழுமலை
P. B. ராமலிங்கம்
S. வரலக்ஷ்மி
P. S. சிவபாக்கியம்
C. T. ராஜகாந்தம்
M. M. ராதாபாய்
ஆகியோர் நடித்தது



★

நடனம்: ஸ்ரீமதி தாராசௌத்ரி
( வள்ளி திருமணம் நடனம் )
லலிதா & பத்மினி

★

டைரக்ஷன்: L. S. ராமச்சந்திரன்
பாடல்: P. S. ராஜகோபால ஐயர்
சங்கீதம்: G. ராமநாதன்
சூபர்விஷன்: T. R. சுந்தரம், B.A., Bsc. (Leeds)

★

ஸ்டுடியோ: மாடர்ன்

★

## ஜெயப்பிரகாஷ் பிக்சர்ஸ்,
காந்தி ரோடு, எக்ஸ்டன்ஷன், சேலம்

No 4






ஒவ்வொரு மணி நேரத்துக்கும்
அதிகமாக அச்சிடுகிறது



அதி நேர்த்தியான
அச்சு — அப்பழுக்கற்ற
மைப்பூச்சு



மின்சார சக்தியினாலும்
காலால் மிதித்தும்
இயக்கலாம்

அச்சு வேலை துரிதமாக நடக்க—பாரதி அச்சு இயந்திரத்தைவிட அதிக திருப்தி யளிக்கக்கூடிய இயந்திரம் கிடைப்பது துர்லபம். இன்றுவரை கண்டு பிடிக்கப் பட்ட இயந்திர நுட்பங்களையும், நவீன இயந்திர சாதனங்களையும் கொண்டது. இந்த அரிய மெஷின் ஒரு மணிக்கு 2,350 பிரதிகள் வீதம் அச்சிடுகிறது. ப்ரின்டிங் வெகு துல்லியமாக இருக்கும். குறைந்த செலவில் நிர்வகிக்கலாம். இயற்கை உறுதியிலும் எளிய அமைப்பிலும் அச்சு இயந்திரங்களுள் முதன்மை பெற்றது பாரதி தான். அரை டெமி, புல்ஸ்காப், க்ரௌன் - போலியோ — ஆகிய சைஸ்களில் கிடைக்கும்.

# பாரதி ப்ரின்டிங் மெஷின்

தி இந்தியா மெஷினரி கோ., லிமிடெட்.
29, ஸ்ட்ராண்ட் ரோடு, கல்கத்தா

மானேஜிங் ஏஜண்டுகள்: தாஸ் பிரதர்ஸ்

போன்: கல்கத்தா-3385 தந்தி: "MARVELLOUS"

A. A. S.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk Madras

முன்னை வித்தியாசங்களை, தொடர்புகளை எல்லாம் தமிழிலே கற்கக் கூடாதா? அல்லது கற்க முடியாதா? தமிழனின் தன்னிகரற்ற வாழ்க்கைத்திறனை, தமிழனது வாழ்விற்கும் தமிழ் இலக்கியத்திற்கும் உள்ள தொடர்புகளை எல்லாம், தமிழன் ஆங்கிலத்தில் தானா கற்கவேண்டும்? ஏன் இந்த இழிவான முறை?

ஒரு சிக்கலான விஷயத்தை முன்னினும் நன்கு அறியவைப்பது தாய்மொழி அல்லவா? நாங்கள் தமிழ் மாணவர்கள் என்று கூறிக்கொண்டு தமிழுக்கே உரித்தான விஷயங்களை ஆங்கிலத்தில் கற்பதா? இப்படிக் கற்பதிலே எத்தனையோ சிரமங்கள்! ஒரு 5-வது பகுதித் தமிழ் மாணவன் என்ற முறையிலே நான் கண்ட இந்தக் குறையை எழுதினேன். என்று நீங்குமோ இந்தக் குறைகள்?

ஜெ. எம். ஹுஸைன்.

சென்னை
19—7—48

## நிச்சயம் ஒரு வேலை

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு.

சொற்ப நாள் முன் தினப்பத்திரிகைகளில் அறிவோம்: இந்திய வேலைகள் எல்லாவற்றிலும் பெண்களுக்குச் சம உரிமை உண்டு என்ற தலையங்கத்தைக் கண்டதும், நான் மட்டும் அல்ல எல்லா ஆண்களுமே வியப்புற்றனர். இந்தச் செய்தியைக் கேட்டால், கலாசாலை மாணவர்களாகிய எங்களுடைய நிலைமை என்னாவது இருக்கும்? பெண்களுக்கு உரிமை வேண்டியதுதான். ஆனால் அதிலும் அளவு உண்டு. "பெண் உள்ளம் பேதை உள்ளம், கண்கள் மென்மை வாய்ந்தவை. உடல் வஞ்சிக் கொடி போன்றது" எனக் கூறும் போது ஆமோதிக்கிறோம். ஆனால் கொடி போல் மென்மையான அவர்களா, கடினமான போலீஸ், இன்ஜினீயர், மெடிகல் முதலிய கலைகளைக் கற்று வேலை செய்வார்கள்? 'பெண் என்றால் பேயும் இரங்கும்' என்ற வசனப்படி பள்ளியிலும், கலாசாலையிலும், ஆசிரியர்கள் மனமிரங்கி மார்க்குப் போட்டதைப்போல் இனி வேலை நியமனம் செய்பவர்களும் பெண்களுக்கு முதல் இடம் தருவார்கள். வேலையின்றி வறுமையினால் வாடும் ஆண்கள் பலர் இருக்க, பெண்களை எல்லா வேலைகளிலும் சேர அனுமதித்தால், நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரிக்கும். ஆனால் வெளிநாடுகளிலிருந்து வரும் பவுடர், லிப்ஸ்டிக் முதலிய சரக்குகளுக்கு இந்தியாவில் கிராக்கி ஏற்படும். ஆனால் இனி ஒவ்வொரு ஆணுக்கும் ஒரு வேலை கிடைப்பது நிச்சயம். அதுதான்......சமையல் வேலை.

டி. எம். ரகுநாதன்.

திண்டுக்கல்
9—7—48

## முக்கியமான பிரச்னை

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு.

நாட்டிலெங்கும் பணப்புழக்கம் குறைந்த தொடர்ந்து, பசியும் பட்டினியும் அதிகமாகி வறுமை தலைவிரித்தாடுவதன் இலட்சணத்தை வீதியிலே பிச்சை எடுப்பவரின் தொகையிலிருந்து தெரிந்து கொள்ளலாம். ரயில்வே ஸ்டேஷன்களில், ஓடும் ரயில்களில், கோவில் பிராகாரங்களில், கோபுர வாயிற்படிகளில் மற்றும் திருவிடங்களில் பிச்சை எடுப்பவர்களைப் பார்க்க மனம் ஒப்பவில்லை.

அகதிகள் பிரச்னை சற்று நாட்களுக்கு முன் தீவிரமாக அடிபட்டது. அவர்களை வைத்துப் பராமரிக்க ஒவ்வொரு மாகாணத்து அரசாங்கமும் முன் வந்தது. மத்திய அரசாங்கத்தில் புது இலாகா ஏற்படுத்தப்பட்டது. நிதி திரட்டப்பட்டது. அவர்களுக்கு வேலை தேடிக் கொடுக்க ஸ்தாபனம் நிறுவப்பட்டது. இதெல்லாம் வகுப்புக் கலவரத்தால் பாதிக்கப்பட்டு வீடு உடைமை சுற்றம் இழந்து ஓடி வந்த வடநாட்டு அகதிகளுக்காகச் செய்யப்பட்டது. அதே மாதிரி பரம்பரை அகதிகளாக ஆகாயத்தைக் கூரையாகவும் தெரு ஓரங்களைப் படுக்கையாகவும் கொண்டு ஒழுக்கமற்ற வாழ்க்கையை நடத்தி நாளுக்கு நாள் பெருகி வரும் பிச்சைக்காரர்களின் நிலையை உயர்த்த—ஏன், நிலையையே ஒழிக்க—முயற்சி எடுக்கக் கூடாது?

தடை செய்வதினாலோ-சட்டமியற்றுவதினாலோ பலனில்லை; திட்டமான ஒரு முடிவுக்கு வந்து அகதிகள் விடுதி போல் ஒவ்வொரு ஜில்லாவிலும் அமைக்க வேண்டும், உடலின் பலமுள்ளவர்களுக்குத் தக்க வேலைக்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

நிதி நிலைமையைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. கோயில்கள் ஒவ்வொன்றிலும் யாத்ரீகர்கள் போடும் 'உண்டிக் காசு' ஒன்றே போதும். இந்தப் பிரச்னையைச் சமாளிக்க மந்திரிசபை ஆவன செய்ய முன்வருமா?

வேம்பு.

மதுரை
10—7—48

## சிரத்தை காட்ட வேண்டும்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு.

நான் இராமநாதபுரம் ஜில்லாவைச் சேர்ந்தவன். எங்கள் ஜில்லாவோ வானம் பார்த்த ஜில்லா. எங்கள் ஜில்லாவில் குறிப்பாக சிவகங்கை, திருப்பத்தூர், சாத்தூர், அருப்புக்கோட்டை, திருவாடானை தாலுக்காக்கள் தண்ணீர்ப் பஞ்சத்திற்குப் பேர் போனவைகள். சிவகங்கையில் இன்றைய நிலையில் குடி தண்ணீரே கிடையாது.



ஜனங்கள் நாலைந்து மைல்கள் நடந்து போய்த் தண்ணீர் கொண்டு வருகிறார்கள். சர்க்காரில் கிணறு வெட்டக் கிணறு ஒன்றுக்கு ரூ. 500 முதல் 750 வரை கடன் கொடுக்கிறார்கள். அநேக கிராமங்களுக்குக் கிணறுகள் வெட்ட ஆயிரக் கணக்கில் கடன் கொடுக்கிறார்கள். ஆனால் கிணறுகள் வெட்டினதாய்த் தெரியவில்லை. அதிகாரிகளின் அசிரத்தையே காரணம் எனலாம். சிவகங்கைக்குப் பதினாறு மைலில் ஓடும் கருனி ஆற்றின் (பெரியாற்றுப்) பாசனத்தை 1911-ம் வருஷம் கால்வாய் வெட்டி சிவகங்கை வழியாகத் தண்ணீரைக் கொண்டு வந்து விவசாய அபிவிருத்தி செய்திருக்கிறார்கள். இப்பொழுது அந்தக் கால்வாய் சிவகங்கையிலிருந்து நான்கு ஐந்து மைல்களுக்குத் தூர்ந்துபோய் விட்டது.

இந்தக் கால்வாயைச் சீர்படுத்தி, கிணறுகளும் வெட்டினால் இராமநாதபுரம் ஜில்லா வளமுள்ள ஜில்லாவாகி விடும் என்பதில் ஐயமில்லை. இதைச் சர்க்கார் கவனிக்குமா?

பி. லெட்சுமீச்வரன்.

---

★ இந்த இதழில் வெளியாயிருக்கும் வட்ட மேஜைக் கடிதங்களில் பொறையாறு தேவி சரோஜா எழுதியிருக்கும் கடிதத்துக்கு ரூ. 25—0—0 பரிசளிக்கப்பட்டது.

Regd. No. M. 4392



மாதர்
விரும்புவது

# ராஜா ஸ்னோ

## ஹேர்ஆயில் & கஸ்தூரி சோப்




MANYAM & CO., BANGALORE, MADRAS & BOMBAY. . . .

கல்கத்தாவிற்கு வினியோகஸ்தர்:: ஸ்ரீ S. N. ராவ், 81-நேதாஜி ரோடு
பம்பாய் ஆபீஸ்: 142, ஓல்டு மோடி ஸ்ட்ரீட், போர்ட்